உ

பரமபதிதுணை.

சிறந்த ஆயுள்வேத பண்டிதர்களால்

உபயோகித்துவருமவற்றுக்கிணங்கிய

# வயித்திய

# கைமுறைகள்

முதற்பாகம்

இஃது

செழுமணவை

## நல்லண்ணபரிதேசி

அவர்களனுக்கிரகத்தின்படி

எழுதி முடிவுபெற்று.

திருமணவூர்

## முனிசாமிமுதலியாரால்

சித்தூர்

வீராசாமிநாயுடு குமாரர்

## கேசவலுநாயுடு

[illegible] அவர்களது,

வித்தியாவிநோத அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

—*—

1896.



# விளம்பரம்.

—()—

பதினோராவது நிகண்டு சுத்தப்பிரதி
விசேட குருத்துரையுடன்
ராஜசுரநாடகம் படத்துடன்
சாலவினோதத்திரட்டு 600 பாடல்
முதற்பாகம்
சகாதேவன் சோதிடநாடி
சுருக்குபஞ்சபட்சி
இராமதேவர் உரோமரிஷி } சோதிடசிந்தாமணி
அங்ககுறிசாஸ்திரம்
சகாதேவர்செய்த108-லக்கமும்
சந்தனக்குரடும்

வைத்திய-வைத்தியாநந்தலஹரி
சத்தகராதி
அனுபோக ஆயுள்வேதச்சுருக்கம்
தருமநாடகம்
மாம்பழக்கவிராயர் கீதாமிர்தசாரம்
பெரியபுஸ்தகம்
ஏகாதசிபுராணமென்னும்ருக்குமாங்கதபடலம் உரையுடன்
கௌசிகசிந்தாமணி முதல்பாகம்
ஷை இரண்டாம்பாகம்.
தற்கஜோசியம்

இதுடன் உயர்ந்த கிளேஸ்காகிதத்தில் சுத்தப்பிரதியாய்
அச்சிட்டிருக்கும்புஸ்தகங்கள்.

அருணகிரிநாதர்வகுப்பு
கல்லாடம் உரையுடன்
சடகோபரந்தாதி உரையுடன்
பாடுதுறை
விநாயகபுராணவசனகாவியம்

ஞானவாசிட்ட விசேடகருத்துரை
யுடனசுத்தப்பிரதி
பாகவதப்புராணம்செய்யுள் 9000
கம்பராமாயணம் செய்யுள் 12000
பாகவதப்புராணம் வியாசர்பாகவதத்
திற்கிணங்கவசனம்.

இப்போது அச்சிட்டுவரும் புஸ்தகங்கள்.

ஓராசாஸ்திரம் உரையுடன்
பழனிஸ்தலபுராணம் உரையுடன்
தாயுமானவர்பாடல் சைவசித்தாந்தஉரையுடன்
விவேகசிந்தாமணி உரையுடன்

இவைகள் கூடிய சீக்கிரத்தில் வெளியிடப்படும் கடிதம் யெழுதுவோர் சென்னை பெரம்பூர் பாரக்ஸ் ஐரோட்டு வித்தியாவினோதம் பிரஸ் சி. வீ, கேசவலுநாயுடு யிடத்திலும், கோயமுத்தூரில் எமது சி. வீ. வகைபுஸ்தகஷாப்புக்கும் எழுதி தருவித்துக்கொள்ளலாம்.

ஸ்டாம்பு அல்லது ரிப்ளைகார்ட்டு இன்றி விடையுரைக்கப்படுவதல்லை.

இப்படிக்கு,
சி. வீ. கேசவலுநாயுடு,

உ

வேலுமயிலுந்துணை.

# முகவுரை.

சாகரஞ்சூழ்ந்து கண்ணகன்றொளிரும் இப்பூமண்டலத்தில் கண்டெல்லாம் வல்லமுத்தர்களாகிய பதினெண்சித்தர்களால் திருவாய்மலர்ந்தருளிய வெண்ணிறந்த வயித்தியசாஸ்திரமென்னும் ஆயுர்வேதத்தை ஆய்ந்தெடுத்த நிபுணர்களாகிய பண்டிதசிகாமணிகள் கையாடிவந்த மெய்யானமுறைகள் அளவிறந்துள்ளதாயின் அவற்றுள் யெம்மால் கிடைத்தமட்டில் சேகரித்த சிலமுறைகளை "செழுமணவை" நல்லண்ணபரிதேசியாரவர்கள் முன்னிலையில் பரிசோதித்து ஷையாரவர்கள் மருகரும் மாணாக்கருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, சிறுமணவூர் "முனிசாமி முதலியாரால் அணியணியாகக் கலன்பிரித்து சுத்தபாடமாயும் யாவரும் யெளிதி லுணரும்படியாயும் தமது புத்திக்கெட்டியவாறுமாகயெழுதி நிறைவேறி (வயித்தியகைமுறைகள்) யென்னும் பெயரமைத்து அச்சிடலாயிற்று. இன்னூலை யாதாமொருவரும் தமது உத்திரவின்றி யெந்த பாஷையிலுமாவது சொற்களையும் முறைகளையும் முன்பின்னாவது யெவ்விதத்திலும் அச்சிடக்கூடாது.

| | | | |
|---|---|---|---|
| 1 - புத்தகம் விலை | 0 | 8 | 0 |
| வி - பி. சார்ஜ் | 0 | 3 | 0 |

10 - புத்தகம் ஓரேதடவையில் வாங்கினால்

1 - புத்தகம் கமிஷன்கொடுக்கப்படும்

வியாபாரிகட்கு தகுந்த லாபங்கொடுக்கப்படும்.

உ

கடவுள்துணை.



சிறந்த ஆயுள்வேத பண்டிதர்களால்
உபயோகித்துவருமவற்றுக்கிணங்கிய
வயித்திய

# கைமுறைகள்.

நெடுமாற்றுதி.

துய்யபொன்மகள் தொட்டுமகிழுமால்
வையமேழும் வளர்ந்தநெடியமால்
செய்யபாதம் சிரம்படப்போற்றியே
கைமுறைத்தொழிற் காசினிக்கோதுவாம்.

காப்பு.

பரிதிமதியானபர வெளியேகாப்பு
பஞ்சமுகமாகிநின்ற வொளியேகாப்பு
கருதரியமும்மூர்த்தி பாதங்காப்பு
கருணைவளர்சிவகாமி கமலங்காப்பு
அரியபலமறையுதவும் வாணிகாப்பு
ஆனைமுகன்றன்னோடு முருகன்காப்பு
துரியநிலைகடந்துநின்ற சித்தர்காப்பு
தொல்லுலகில்நாதாக்கள் பாதங்காப்பே,

பாதமேகாப்பாக பணிந்துவாழ்த்தி
பாரிலுள்ள மானிடர்க்குப் பழயகன்ம
தோதகத்தால் வரும்பிணிகள் தீரவேண்டி
தொந்தரையொன் றில்லாமல் திரைகணிக்கி

பேதமற்றுத் தாம்தாமே செய்துக்கொள்ள
பெரியோர்கள் அருகிருந்து பேசும்போலச்
சாதகமாம் கைமுறைகள் யாவுங்கோர்த்து
சாதித்த பின்னூலின் சார்புகேளே. 2

சார்பாகக் கன்மகாண் டத்தின்வாறு
சகலபிணி வருங்குறிகள் சாற்றிப்பின்னே
கோர்பாக மாத்திரையின் வகுப்பினோடு
நிலையான கட்டுசில செந்தூரங்கள்
கார்போன்ற யெண்ணெவகை தயிலத்தோடு
கைகண்ட சூரணங்கள் கிருதபாகம்
நீர்போன்ற இயாழ்வல் லாதிபாகம்
நிலையாகக் கைமுறை நிகழ்த்துவோமே. 3

நிலையான பின்னூலின் கர்த்தாவாலே
நிலத்திலுள மானிடர்கள் பிழைக்கவேண்டி
மலையான நோய்களெல்லாம் அணுப்போல்நீங்க
மானுக்கள் கையாண்ட மருந்தின்மார்க்கம்
சிலைபோற்ற அனுபோக வயித்தியந்தான்
சொன்னமொழி தப்பாது இரண்டுகாண்டம்
தலையான அந்நூலைப் பார்த்தபேர்கள்
தாரணியில் யென்குருவிற் குருவாவாரே. 4

குருவருளால் பாலவயித் தியந்தானென்று
கூறினேன் மக்களது குறைகள்நீங்க
பருமதி ஊர்வசியின் வயித்தியசிட்சா
பகர்ந்திட்டேன் வெகுசனருக்கு பண்டிதர்காய்
அருணகிரி வள்ளலது அன்புமாலை
ஆதரையிற் சிவனேச ரடிக்கச்செய்தே
வெறுமைகலி நீங்கிவெளி வந்தனவர்
விராடபர்வ அம்மானை விளம்பினேனே. 5

விளம்பியதோர் சிந்துக்கவி கோடாகோடி
விச்சித்திர பாட்டுகளோ வனந்தமுண்டு

வளம்பொருந் தும்சொற்பனங்கள் விழிம்புகர்க்கமாம்
வளமான களவரியும் வரிய நூலும்
இளம்பிறைசேர் விழிநுதலார் ருதுநூல்சாஸ்திரம்
மெண்ணரிய பன்னூல்களியற்றிப்பின்னால்
அளவிரந்த சித்தர்க்னூல் ஆயுர்வேதம்
ஆய்ந்தெடுத்துக் கைமுறையா யருளினேனே.

அருளினே னென்றதினாற்பெரியோனல்ல
அனுக்கிரகம் முதியோரார் பெற்றோனல்ல
இருளரவே பலநூலுங் கற்றோனல்ல
யிணக்கமறிந் தொழுகுநெறி யுற்றோனல்ல
சிறுவருக்கும் சிறுவன்சிறு மணவூருற்ற
சிறுவன்முனிசாமியின் சிற்றறிவினாலே
குரவருக்கு நேராகச் செய்தபின்னால்
குற்றமதை மன்னிப்பார் குலத்தினோரே.

குலமென்றால் சாதியிலே உயர்ந்தோனல்ல
குரவரென்றார் கான்றிரியும் வில்லியல்ல
பலமென்றால் சதுரங்க சேனையல்ல
பரதேசி யென்றாக்காற்றியாகியல்ல
நலமென்றால் இந்த்ராதி போகமல்ல
நானென்றால் கருவியடர்யாக்கையல்ல
தலமென்றால் தெய்வநதி கோயிலல்ல
தன்னைத்தான் கண்டவரே தரிசிப்பாரே.

யாரண்டமீரேழாய் நின்றஜோதி
பற்றற்ற நாதாக்கள் கண்டஜோதி
பேரண்ட சிறுவிட்டிலடங்கும்ஜோதி
பின்கலையா யிடகலையாய் புரக்கும்ஜோதி
சீரண்டத் திருநடனஞ் செய்யுஞ்ஜோதி
சகலவுயிர் தாம்தாமா யாடுஞ்ஜோதி
நீரண்டபிண்டமட்டும் நிலைத்தஜோதி
நீங்காத துயில் நீற்று நீயேபாரே

பார்ப்பதர்க்கு நாதாக்கள் கிருபைவேணும்
பழனாளின் விட்டகுறை பலிக்கவேணும்
நீற்பதற்கு மனந்தானே னிலைக்கவேணும்
னின்றாலும் சாதிக்குந் திரமைவேணும்
பூற்பதற்குப் பக்குவம்வந் தடிக்கவேணும்
பூமியிலே மாண்டவர்போல் பொறுமைவேணும்
காற்பதற்கும் வெவ்வுயிற்கும் மருனேவேணும்
கைமுறையின் றெழிகோ ரணங்களாமே.

வயித்திய கைமுறைகளினாறு

## பாயிரம்

முற்றிற்று.



உ

கடவுள்துணை.

# வயித்திய

# கைமுறைகள்

முதலாவது

## விரேசனவகுப்பு.

### சுகபேதி.

| | | |
|---|---|---|
| சூரத்துநிலாவரை | பலம் - | ௫ |
| சோம்பு | ,, | வ |
| சுக்கு | ,, | வ |
| கொத்தமல்லிவிரை | ,, | க |
| சீனாக்கற்கண்டு | ,, | க |

இவைகளை யிடித்து வஸ்திரகாயஞ்செய்து அரைபடி ஜலத்திற்கலந்து அடுப்பேற்றி ஆழாக்குகியாழமாய் காச்சியிறக்கி கொஞ்சம் பசும்பாலவிட்டரைத்து சாப்பிடவும் கற்கண்டுதூளியாழமிறக்கயில் போடவும் சுகுணமகபேதியாகும் இளைப்பாயாசமிராது தப்பு அல்லது கக்கரி, பவரை முருங்கைப்பிஞ்சு மிளகு ரசஞ் சாப்பிடவும் மலையில் மிளகுகடலையிட்டு கியாழம்சாப்பிடவும்.

### குளிர்ச்சி பேதி.

| | | |
|---|---|---|
| ஆமணக்கெண்ணை | பலம் - | க |
| பேயன்வாழைப்பழம் | ,, | உ |
| இந்துப்பு | ,, | ௫ |

வாழைப்பழத்தை சன்னமில்லைகளாக அருத்துயெண்ணெயில்போட்டு இந்துப்புபொடித்துப்போட்டு கலக்கிஒருஇராமுழுதும் வைத்திருந்து மறுநாள்காலையில் கன்றுய்க்கலக்கி சாப்பிடவும் சகுணமாய்பேதியாம் முன்மாதிரியாகவே அசனமருந்தவும்.

## காடிநீர்பேதி.

முந்தெண்ணை அன்னக்காடி புளித்தமோர் இவைசமன்சேர்த்து (௩) படியுள்ளதாய்குடித்து சற்றுநேரம்பொருத்துநீராகாரத்தில் உப்புகரிக்கவிட்டு ஒருதவனைசாப்பிடவும் பேதியாம்.

## வாததேகபேதி.

| | |
|---|---|
| பழையபுளி | களஞ்சி - ௧ |
| கொடிக்கள்ளிப்பால் | விராகனிடை - ௩ |

ஷை புளியைகோதுமுதலிய அழுக்கில்லாமலெடுத்து நிறைப்படி அல்லது களஞ்சிக்காயளவெடுத்து குழைகபோல்பண்ணிக்கேவி (அ) அல்லது (ய) துளிகொடிக்கள்ளிப்பால்விட்டுகோலிகைப்போல் உண்டைசெய்து சாப்பிடவும் காரளமாய்பேதியாகும் பேதியதிகமானால் மோர்சாதம் சாப்பிடவும் பகலிலும் மோர்சாதம் இரவிலபகம்பால் சக்கரையிட்டு அசனமருந்தவும் அதிகமாய்வுதேகிகள் சாப்பிடவேண்டியது.

## பித்ததேகிக்கு நீராகாரபேதி.

| | | |
|---|---|---|
| சிவைவேர் | பலம் - | ௨ |
| புரசைவித்து | ,, | ௨ |
| இந்துப்பு | ,, | ௩ |

சிவதை வேரும் புரசைவித்தும் பாலிலவேகவெடுத்து உலர்த்தி ஆரணித்து இந்துப்பைப் பொடித்துகலந்து அழ'

க்கு நீராகாரத்தில் உப்புகரிக்கவிட்டு ஷை தூளைக்கலந்து சாப்பிடவும் பேதியாம் பகலில் சூப்புசாதம் அல்லது மிளகுநீர்சாதம் கொள்ளவும்.

## சிலேட்டும தேக பேதி.

ரோஜாப்பு (௨) பலம் யிளம் வறுப்பாய்வறுத்து மோர் அல்லது வெண்ணீரில் குழப்பி (௩) கிட்டிக்கை கற்கண்டு தூளிட்டு சாப்பிடவும் பேதியாம் முன்மாதிரியே பத்தியங்கொள்ளவும்.

## மேக தேக பேதி.

| | | |
|---|---|---|
| புரசம்விதை | பலம் | [illegible] |
| பனைவெல்லம் | ,, | ௨ |
| இந்துப்பு | ,, | ௫ |

ஷை இரண்டினுசும் ஒன்றிரண்டாயிடித்து அரைப்படி ஜெலத்திலிட்டு இரா அடுப்பில் வைத்து ஆழாக்கு கியாழமாகக் காச்சி வைத்திருந்து காலையில் வடிக்கட்டி இந்துப்பை பொடித்துப் போட்டு கலக்கி சாப்பிடவும் கத்திரி முருங்கை அவரை இதுகளின் பிஞ்சுபொரித்தும் மிளகு நீர் கூட்டியும் சாப்பிடலாம் மாலையில் மிளகு கடலையிட்டு சுக்கு, பாங்கிச்சக்கை தட்டிப் போட்டு கியாழம் கொள்ளவும்.

## வெண்ணீர் பேதி.

சிவதைவேர் கொண்டுவந்து பாலில் வேகித்தெடுத்து உலர்த்தி சூரணித்து சரியிடை சக்கரைசேர்த்து ஏலத்தூள் அரிக்கால் பலம் கூட்டி திருகடித்தூள் யெடுத்து (௨) யாழாக்கு வெண்ணீரில் கலந்து சாப்பிடபேதியாம்.

## கிழாழபேதி.

| | | |
|---|---|---|
| இர்லப்பு | விராகனெடை | க |
| களிப்பாக்கு | ,, | உ |
| கடுகுரோகணி | ,, | ௩ |
| கடுக்கா | ,, | ச |
| நிலவாரை | ,, | ரு |
| கருவேலங்கொழுந்து | ,, | சு |
| கற்றாழஞ்சாறு | ,, | எ |
| பிரமியிலை | ,, | அ |

இவைகளையிடித்து (அ) படி ஜெலத்திலிட்டு நாலிலொன்றாய் வற்றக்காச்சி நாலுதிரம் வடிகட்டிக் கொடுக்க நன்றாய்பேதியாகும்.

## மலக்கட்டுபேதி.

பூவரசம் பட்டையில் ஆவின்பால் விட்டிடித்து நாலுதிரம் வடிகட்டி கொடுக்க பேதியாம் மலக்கட்டு ஜெலக்கட்டு தீரும்.

## சிரங்குபேதி.

சிறு செருப்படையும் மிருள்ளியும் சமன் கொண்டிடித்து சாறுவாங்கி ஆறுதிரம் வடிக்கட்டி அரையாழாக்கு கொடுக்கபேதியாம் மேகச்சிரங்கு முதலானதும் தீரும்.

## கிருமிபேதி.

புரசம் விரை (உ) கொண்டுவந்து சாணியில்செருகிவைத்து காலையில்யெடுத்து மேற்றோலை நீக்கி பசும்பாலி லரைத்து கொடுக்க பேதியாம் வயற்றிலுள்ளப் பூச்சிகள் கூண்டோடுவிழும்.

இதுவுமது.

## கிருமிகள் பேதி.

பிரண்டைவேர், வேப்பீர்க்கு, புரசம்விரை, ஓமம், இவைகள் சமன் கொண்டு யிடித்துவெள்ளாட்டு நீரில் கியாழம் செய்து கொடுக்க வயிற்றுக்கிருமிகள் பந்து பந்தாய் விழும்.

இதுவுமது.

## கிருமிகள் பேதி.

சரக்கொன்றை கொழுந்தை அவிழ்த்து பிழிந்து தண்ணீரில் சீனிகலந்து அரிக்கால்படி நிதானத்திற்கு கொடுக்க கிருமிகள் விழும்.

இதுவுமது.

## கிருமிகள் பேதி.

மிதிபாகயிலை ஒருபிடி மிளகு, (கூ) இதை நெகிழ அரைத்து கெச்சக்காய் பிரமாணம்கொடுக்க பொடிக்கிருமிகள் விழும்

விரோசனவகுப்பு.

முற்றிற்று.

குருமுன்னிற்க.



உ

சடவுள்துணை.

இரண்டாவது

# மாத்திரைவகுப்பு.

## அல்லது குளிகை யெனக்கொள்க.

[-][*][-]

### கட்டுவாதிமாத்திரை.

| | | |
|---|---|---|
| அதிவிடையம் | விராகனிடை | க |
| அபினி | ,, | க |
| சுக்குத்தூள் | ,, | உ |

இவைமூன்றுங் கல்வத்திலிட்டு பழாசம்விட்டு மூன்றுசாமம் அரைத்து கடலைவீதம் மாத்திரைசெய்து பெரியோர்க்கொன்று சிறியவர்களுக்கு (½) மாத்திரையாக தயிர்வடிகட்டி யதில்கொடுக்கவும் சுண்டைவத்தல் கரிவேப்பிலை இரண்டும்ஒவ்வொருபிடி சட்டியிலிட்டு நெய்விட்டு கருக்கவருத்து தூள்செய்து சுசோதத்தில் பிசைந்துண்ணவும்.

### மகாவேகக்கட்டுவாதிகுளிகை.

| | | |
|---|---|---|
| ஜாதிக்காய் | விராகனிடை | க |
| ஜாபத்திரி | ,, | க |
| கடுக்காய்ப்பூ | ,, | க |
| மாசிக்காய் | ,, | க |
| சீரகம் | ,, | க |
| லவுங்கப்பூ | ,, | க |
| கசகசா | ,, | க |
| வெந்திரம் | ,, | க |
| அதிவிடையம் | ,, | க |

| | | |
|---|---|---|
| கோரோசனை | ,, | ௧ |
| அபினி | ,, | ௧ |

இவைகளை வெய்யலிட்டு உலர்த்தியிடித்து வஸ்திரகாயம் செய்து முலைப்பால்விட்டு (௪) ஜாமம் அரைத்து மிளகளவுமா த்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத்துக் கொண்டுநெய், தேன், வடிக்கட்டியதயிர் யிவைகளில் பேதியரிந்து கொடுக்கஅதிசாரம் கிரணி ஜெலக்கிராணிசீதம்இவைதீரும்பிரச்சிகுழம்பு, கத்திரி, அவரை, முருங்கை, இதுகளின்பிஞ்சுபொரிக் குழம்புகள் செய்துண்ணவும்.



## வாதசிந்தாமணிக்குளிகை,

| | | |
|---|---|---|
| கெந்தி | விராகநிடை - | ௧௦ |
| ரசபி | ,, | ௧ |
| சூதம் | ,, | ௧ |
| மிளகு | ,, | ௧ |
| பூசணைவிதை | ,, | ௧ |

இவைகளைக் கிரமப்படி சுத்திசெய்து கல்வத்திலிட்டு தேன்துளி துளியாகவிட்டு அரைத்து (௨) ஜாமம்பூர்த்தியானபிறகு பயறளவு குளிகைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில்வைத்துக் கொள்ளவும் முலைப்பாலில் (௧) அல்லது (௨) தேகதிடமறிந்து கொடுக்கவும் வாதசுரம் சீதசுரம்யாவும்தீரும்இச்சாபத்திடம்.



## சக்கராபாணிக்குளிகை.

ஆமையோட்டைக் கொண்டுவந்து குப்பைமேனியிலையை அரைத்துக் கவசம்தளமாய்செய்து சீலைமண்ணிட்டு உலர்த்தி (௬) வரட்டியில் புடம்வைத்தெடுத்து அரைத்த ஆமையோட்டுபற்பம்.

| | | |
|---|---|---|
| ஷை ஆமையோட்டுபற்பம் | விராகநிடை- | ௪ |
| மிளகு | ,, | ௧ |

| | | |
|---|---|---|
| பூரம் | ,, | உ |
| திப்பிலி | ,, | க |

இவைகளை கல்வத்திலிட்டு முலைப்பால்விட்டரைத்து மிளகளவு உருண்டைசெய்து நிழலுலர்த்தி வைத்துக்கொண்டுதேனில் (க) மாத்திரை அல்லது (உ) மாத்திரையிடவும் இச்சாபத்தியம் பலவிதசுரமும் தீரும்.



இராஜயோக்கிய

## விரோசனக்குளிகை,

| | | |
|---|---|---|
| இந்துப்பு | விராகனிடை | க |
| கடுகுரோகணி | ,, | உ |
| வாளம் | ,, | ரு. |

இவைகளுலவத்திலிட்டு சக்குகியாழம் விட்டரைத்துசுண்டக்காய் விதம்குளிகைசெய்து நிழலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் ஒருகுளிகையெடுத்து சக்கரையில வைத்துசாப்பிடவும் சொகுசயிட்டு பேதியாகும் பேதிநிற்க வேணுமாகில் குளிர்ந்தஜெலத்தில காலலமபவும் நிற்கும் இச்சாபத்தியமாகபுசிக்கவும்.



## சிசுகட்டுவாதிகுளிகை,

ஒருஜாதிக்காயை துளைசெய்து பணவிடை அபினியடைத்து மஞ்சள் கவசம்செய்து (க) வரட்டியில் புடமிட்டுமஞ்சள்வெந்தபிறகெடுத்து கவசம்நீக்கி முலைப்பால்விட்டு அரைத்துமிளகளவுமாத்திரைசெய்து வைத்துக்கொண்டு குழந்தைகளுக்குகாணும்பேதி கழிச்சல்கிராணி அஜீரணக்கழிச்சலிவைகட்கு ஒருமாத்திரை முலைப்பாலிலிடவும் தீரும்.



## சுரக்குளிகை,

| | | |
|---|---|---|
| தாளகம் | பலம் | ௧ |
| துத்தம் | ,, | ௧ |
| நபி | ,, | ௧ |
| வெண்காரம் | ,, | ௧ |

இவைகளை கல்வத்திலிட்டு பாலைச்சார்விட்டு நாளொன்றுக்கு ௩-ஜாமமாக ௩-நாளரைத்து பயாளவுமாத்திரை செய்து நிழலுலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் தேன்முலைப்பால் இதுகளில் க-உ-மாத்திரையிட பலவித சுரங்களும் உ-௩-வேளையில் தீரும் பத்தியம் சுரத்தின் கடோமறிந்து வைக்கவும்.

சுரக்கோடரிமாத்திரை.

| | | |
|---|---|---|
| தாரம் | களஞ்சி- | ஆ |
| கெந்தி | ,, | ஆ |
| ரசம் | ,, | ஆ |
| நாபி | ,, | ஆ |
| சுக்கு | ,, | ச |
| திப்பிலி | ,, | ச |
| மிளகு | ,, | ச |
| கடுக்காய் | ,, | ச |
| தான்றிக்காய் | ,, | ச |
| நெல்லிக்காய் | ,, | ச |

சுக்குமுதல் ஆறுவகையும் ரவியிலுலர்த்தியிடித்து பொடித்து வஸ்திரகாயம் செய்து யாவும் ஒன்றுபட நிறுத்தி அவ்விடைக்கு சமன் வாளம் நிறுத்தெடுத்துக்கலந்து கல்வத்திலிட்டு கைவிடாமல் நாலுஜாமம் அரைத்து மிளகளவுமாத்திரை செய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத்துக்கொள்ளவும் வேண்டியபோது தேகதிடமும் நோய்திடமும் அறிந்து க-அல்லது உ-மாத்திரையெடுத்து தேன் முலைப்பால் சர்க்கரை சுக்குக்கியாழம் இதுகளிலெதிலேனுமிட உ-௩-வேளையில் எவ்வித சுரங்களும்தீரும் இச்சாபத்தியம்.

அக்கினிகுமாரக்குளிகை.

| | | |
|---|---|---|
| வெண்காரம் | பலம் - | ð |
| நாபி | ,, | ð |

| | | |
|---|---|---|
| கெந்தி | ,, | உ |
| சூதம் | ,, | உ |
| மிளகு | ,, | க |
| பெருக்கின்வேர்பட்டை | ,, | க |

இவையாவும் பிரண்டைசார்விட்டு தினம் ஒருஜாமமாக அரைத்து மிளகளவுமாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத்துக்கொள்ளவும் ஜன்னிக்கு இஞ்சிச்சாற்றிலும் மாரல் சுரங்களுக்கு பஞ்சமூலக்கியாழத்திலும் சில சாத்தியசுரம் தலைவலி சீதளம் இவைகளுக்கு தேன் முலைப்பால் இதுகளில் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

---

வைசகோடாசுழிக்குளிகை.

| | | |
|---|---|---|
| நாரம் | விராகனிடை | க |
| ரசம் | ,, | க |
| கெந்தி | ,, | க |
| சவுரி | ,, | க |
| வெள்ளை | ,, | க |
| லிங்கம் | ,, | க |
| வங்காளப்பச்சை | ,, | க |
| வெண்காரம் | ,, | க |
| அக்கிராகாரம் | ,, | க |
| சுக்கு | ,, | க |
| திப்பிலி | ,, | க |
| மிளகு | ,, | க |
| இருவி | ,, | க |
| கடுக்காய் | ,, | க |
| நெல்லிக்காய் | ,, | க |
| தான்றிக்காய் | ,, | க |
| வாளம் | பலம் | க |

இவைகளில் சூரணம் செய்யவேண்டியதுகளைச்செய்து மற்றபசரக்குடன்சேர்த்துக் கல்வத்திலிட்டு கொச்சிச்சாற்றில் ஒரு

ஜாமம் அரைத்து கையாந்தகரைச்சாற்றி லொருசாமமரைத்து துளசிச்சாற்றிலொருசாமம் இப்படி ௩-நாளைக்கு மூன்றுசாமம் அரைத்து வெற்றிலை, பாக்கு-டுமி, இவைகளுரலிலிட்டிடித்து பிழிந்தசாற்றில் மூன்றுசாமம் அரைத்து கடைசியில்வெள்ளாட்டுப்பாலில் ஒருசாமம் அரைத்து மிளகளவுமாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில வைத்துக்கொள்ளவும் அடியில்வரும் அனுபானத்திற் சம்பந்தப்படுத்தி அந்தந்த வியாதிகட்குபிரயோகிக்கவும்.

## அமரத்திற்கனுபானம்.

ஒருமாத்திரையை முலைப்பாலிலிழைத்துக்கொடுக்க நேத்திரத்திலுண்டாகும் புதியமறைப்புகள் தீரும்.

## குளிருக்கனுபானம்.

இரண்டுமாத்திரையை மிளகுத்தூளில்கொடுத்து உடனே வெந்நீர்கொடுக்க விடாத குளிர்நடுக்கல்தீரும்.

## பித்தத்திற்கனுபானம்.

இரண்டுமாத்திரையை சர்க்கரையில்கொடுக்க பித்தம் பித்தகாசம் இவை நீங்கும்.

## செரியாமைக்கனுபானம்.

இரண்டு மாத்திரையை ஓமத்தூளில் சேர்த்துக்கொடுத்து உடனே வெந்நீர்கொடுக்கவும்.

## சாதாரணபித்தவனுபானம்.

ஒருமாத்திரையை சீரகத்தூளில் சேர்த்துகொடுக்க பித்தமயக்கம் வாயூறல் இவை தீரும்.

### விஷத்திற்கனுபானம்.

இரண்டுமாத்திரையை வெள்ளைமிளகுதூள் திருகடியெடுத்து அதிற்கலந்துகொடுக்க சகலவிஷமும் தீரும்.

### வலிகுன்மத்திற்கனுபானம்.

ஒருமாத்திரையை வெள்ளாட்டுப்பாலில் யிழைத்துக் கொடுக்க நீர்க்கட்டி முதலியது தீரும்.

### சூலைக்கனுபானம்

ஒருமாத்திரையை பசும்நெய்யிலிழைத்துக்கொடுக்க சூலை வாய்வு இவை தீரும்.

### நீர்பாண்டுக்கனுபானம்.

ஒருமாத்திரையை கருந்துளசிவேர் அரைத்து சழற்சிக்காயளவெடுத்து அதில் மாத்திரையிட்டுக்கொடுக்கத்தீரும்.

### சன்னிக் கனுபானம்.

ஒருமாத்திரையை தூதாயிலைச்சாற்றில் கொடுக்க தலைபாரமுதல் யாவுந்தீரும்.

### பயித்தியத்திற்கு அனுபானம்.

ஒருமாத்திரையை ஊமத்தம்யிலைச்சாற்றில் கொடுத்தபிறகு நூறுகுடம் குளிர்ந்தஜலத்தை சிரசில் விடவும்.

### கரப்பானுக்கனுபானம்.

ஒருமாத்திரையை கற்பூரவல்லிச்சாரில் கொடுக்க கரப்பான்முதலிய சிரங்குகள் தீரும்.

சத்திகுன்மத்திற்கனுபானம்.

ஒருமாத்திரையை வில்வயிலைச்சாற்றில் கொடுக்க வெள்ளோக்காளம் முதல் யாவுந்தீரும்.

இருமலுக்கு அனுபானம்.

ஒருமாத்திரையை தேனிலிழைத்துக்கொடுக்கபுகையிருமல்கோழையாவுந்தீரும் திரிகடுகு சூரணத்திலுங்கொடுக்கலாம்.

உஷ்ணத்திற்கு அனுபானம்.

ஒருமாத்திரையை சுக்குதூள் ஒருபங்கு மிளகுதூள் ரு பங்குசேர்த்து அதில் மாத்திரையைபொடித்திட்டுவெந்நீரிற்கொடுக்கவும்,

[-][*][-]

வயறெறிச்சலுக்கனுபானம்.

ஒரு மாத்திரையை தயிரில்கொடுக்க வயற்றில்எரிச்சல்நோய் முதலியதுந் தீரும்.

காய்ச்சலுக்கனுபானம்.

ஒருமாத்திரையை நெல்லிப்பருப்புதூளில் கலந்துகொடுக்கவும் இஞ்சிசுரசத்திலும் கொடுக்கலாம்

கிராணிக் கனுபானம்.

ஒருமாத்திரையை பாகயிலைசாற்றில் கொடுக்கவும் ஜலக்கிராணி முதலியதுந்தீரும்.

தலைச்சொரிக்கனுபானம்.

ய௨-மாத்திரையை-ரு-பலம்- புங்கெண்ணெயிலிழைத்துக்காச்சி தலையில் தடவிவாத்தீரும்.

காலமுறைக்காச்சலுக் கனுபானம்,

மூன்றுமாத்திரையைசுக்கு திப்பிலி தனியாமூன்றும் ஙயா மூமிட்டு அதிலயிழைத்துகொடுக்கத்தீரும்.

---

வயற்றக்கடுப்பிற் கனுபானம்,

௩-மாத்திரையை வில்வப்பத்திரி, அதின்காய், மாதுளம்பிஞ்சு இவை சமன்கொண்டரைத்து அதில மாத்திரையைபொடித்துவைத்துக் கொடுக்கவும்.

---

தீரரக்கடுப்பிற்கு அனுபானம்.

ஒருமாத்திரை அதிவிடையம், அபினி-உம்-இரண்டு காசிடையெடுத்தரைத்து குளிகைகளைப பொடித்துசேர்த்துவாத்துமுட்டையின் மஞ்சட்கருவிலிட்டுபொரித்துக்கொடுக்கவும் ஷை அனுபானங்கள் கூரிவர்தபடி உ-௩-வேளை-கொடுப்பதுடன் அந்தத்தவிபாதியறிந்து பத்தியம் வைக்க உத்தமம்,

---

## சஞ்சிவிமாத்திரை.

| | | |
|---|---|---|
| கெந்தகம் | விராகனிடை - | க |
| நாபி | ,, | க |
| வெண்காரம் | ,, | க |
| ரசம் | ,, | க |
| சுக்கு | ,, | க |
| திப்பிலி | ,, | க |
| மிளகு | ,, | க |
| வாளம் | ,, | எ |

இவைகளைப் பொடித்துக் கல்வத்திலிட்டு கையாந்தகரைச்சாற்றில் நாளொன்றுக்கு ஒருஜாமமாக (அ) நாளரைத்துமிளகளவுமாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத்துக்கொள்ளவும்.

அனுபானம்.

இம்மாத்திரையி லொன்றை இஞ்சிச்சாற்றி லிழைத்துதேன்விட்டு திருகடுகு, லவங்கம், தாளிசபத்திரி, சூரணத்திலிட சுரம், சீதசுரம், ஜன்னியாவுந் தீரும் முலைப்பாலிலிழைத்துதேன்விட்டுக்கொடுக்க வாதசுரந்தீரும் ஓமப்ப லிற்கொடுக்க அசீரணம் மந்தம் மாந்தம் யாவுந்தீரும் மசிப்பத்திரிசாற்றில் கொடுக்கமாலசுரம் குளிர்நடுக்கல் தீரும் இச்சாபத்தியமிருக்கவும்.

நேத்திராதிகற்பூரக்குளிகை.

| | | |
|---|---|---|
| கற்பூரம் | வராகநிடை - | க |
| துத்தம் | ,, | க |
| பீதரோகணி | ,, | க |
| கடல்நுரை | ,, | க |
| அஞ்சனக்கல் | ,, | க |
| படிகாரம் | ,, | க |
| சங்கு | ,, | க |
| நாபி | ,, | க |
| சந்தனம் | ,, | க |
| காவிக்கல் | ,, | க |
| அதிமதுரம் | ,, | க |
| தேத்தான்வித்து | ,, | க |

இவைபனிரெண்டும் சரியிடைக்கொண்டு உலர்த்தி யிடித்துசூரணித்து வஸ்திரகாயஞ்செய்து எலிமிச்சம் பழச்சார்விட்டு (ரு) ஜாமம் அரைத்து தூ ளங்காய்பிரமாணம் உருண்டைசெய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத்துக் கொள்ளவும் சேத்துமம் தொண்ணூற்றாறுக்கும் ஜன்னிபதிமூன்றுக்கும் நேத்திரத்தில் சலிக்கமிட சுகுணமாகும்.

சன்னிக்குவயித்திய கற்பூரமாத்திரை.

இரசகற்பூரம் வேண்டியமட்டில் கொண்டுவந்து துழாயிலைச்சாற்றில் மூன்றுநாள் ஊரவைத்தரைத்து சிறுபயறுபிரமாணம்

மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில்வைத்துக் கொண்டு ஜன்னி தலைவலிகட்கு ஒருமாத்திரைதேனில் யிழைத்துத்தின்னவும் இச்சாபத்தியம்.

## சதுப்புமாத்திரை.

| | | |
|---|---|---|
| அரத்தை | விராகநிடை | க |
| கடுகுருணி | ,, | க |
| ஓமம் | ,, | க |
| மதுரம் | ,, | க |
| சுக்கு | ,, | க |
| திப்பிலி | ,, | உ |
| மிளகு | ,, | க |
| கிராம்பு | ,, | க |
| குங்குமப்பூ | ,, | உ |
| கோரோஜனை | ,, | க |

இவைகளைக்கொண்டுவந்து உலர்த்தியிடித்து சூரணித்து வேப்பிலைச்சார்விட்டரைத்து தூதுளங்காய்ப்பிரமாணம் உருண்டைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில்வைத்துக்கொண்டு வேண்டியபோது கற்பூரவல்லிச்சார், அல்லதுபிரண்டைச்சாற்றில்ஒரு மாத்திரையிழைத்துசாப்பிடவும், இப்படி இரண்டுமூன்றுவேளை கொள்ளவும் இச்சாபத்தியம்.

## கோரோசனமாத்திரை.

| | | |
|---|---|---|
| மிளகு | விராகநிடை | கம |
| லவுங்கம் | ,, | கம |
| ஜாதிக்காய் | ,, | கம |
| ஓமம் | ,, | க |
| ஜாபத்திரி | ,, | க |
| சித்திரமூலம் | ,, | க |
| திப்பிலி | ,, | கம |

| | | |
|---|---|---|
| கருஞ்சீரகம் | ,, | க |
| கோட்டம் | ,, | க |
| கோரோஜனை | ,, | உ |
| நாவல்துளிர் | ,, | க |
| மாந்துளிர் | ,, | க |
| வேப்பங்கொழுந்து | ,, | க |
| பூரம் | ,, | க |

இவைகளை உலர்த்தி யிடித்து சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து ஷை இருவகை கொழுந்திட்டு இஞ்சி கியாழம் விட்டு அறைத்து தூதுளங்காய்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் ஒருமாத்திரையைத் தேன் அல்லது சற்கரையில்வைத்து சாப்பிட்டு மாலையில் மிள குக்கியாழங்கொள்ளவும் இச்சாபத்தியம்.

## இருநாழிகைக்குளிகை.

| | |
|---|---|
| இருவி | தாமரைக்கிழங்கு |
| சரம் | எட்டிவித்து |
| கெந்தி | கௌரி |
| நாபி | அக்கிராகாரம் |
| வெள்ளாட்டுபிச்சு | வெள்ளைமிளகு |

இவை சமன்கொண்டு வெள்ளாட்டு பிச்சு நீங்கலாக மற்றவை யிடித்து வஸ்திரகாயஞ்செய்து கல்வத்திலிட்டு ஷை பிச்சு போட்டு அரைத்து கடுகு பிரமாணம் மாத்திரைசெய்யவும், அறைக்கும்போது யிளகாவிட்டால் தேன் துளிதுளியாய்விட்டரைத்து ஒருமாத்திரைவெந்நீரிலிட்டுண்டு நொச்சியிலைவேது அல்லது தேங்காயோட்டை பித்தளை பொகணியின்மேற் கொளுத்திவைத்து முக்காடிட்டுவேதுபிடிக்கவும் இரண்டுநாழிகையில் சுரம் தீரும் பத்தியமில்லை.

மாத்திரைவகுப்பு

முற்றிற்று.

உ

கடவுள்துணை.

# மூன்றாவது

# செந்தூரவகுப்பு.

## லிங்கசெந்தூரம்.

உலர்ந்த லிங்கம் ஒருபலங்கொண்டுவந்து செப்பு நெருஞ்சிப்பூகொய்து சிரியமண்குடுவையில் அறைகிட்டம் ஷ பூவை வைத்து அதன்மேல் லிங்கத்தை வைத்து அதற்கு மேலும் பூவை வைத்து மூடி மேற்கலையம் வைத்து சீலைமண்செய் துலர்த்தி யெட்டுவரட்டியிற்புடம்வைத்து ஆரியபின் எடுக்க செந்தூரமாம் சீசாவி லடக்கஞ்செய்யவும் ஜன்னி, தலைபாரம் முதலியதற்கும் தேனிலிடவும் இச்சாபத்தியம்.

## பச்சமுக செந்தூரம்.

| | | |
|---|---|---|
| தாரம் | விராகநிடை | க |
| லிங்கம் | ,, | க |
| ரசம் | ,, | க |
| கெந்தி | ,, | க |
| வீரம் | ,, | க |

இவ்வைந்தும் ஷ நிறைப்படி தூக்கி காட்டாமணக்குப் பாலிலறைத்து பில்லைதட்டியுலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடுமூடி சீலைமண் இரண்டுசெய்துலர்த்தி குக்குடபுடமிட் டாரினபின் எடுக்கவும், பணவிடை செந்தூர மெடுத்து திருகடுகு பொடியிலாவது தேன், பனை வெல்லத்திலாவது, வெண்ணெயிலாவதுகொடுக்க ஜன்னி, தலைபாரம், ஆரம்பகுட்டம், சூலை, குன்மம், பித்தவாய்வு, கைகால்விரணம் இவையாவுந்தீரும், பத்

தியம் வியாதிக்குத்தக்கபடி யிச்சாபத்தியம் அல்லது கடும்பத்தியம் வைக்கவும்.

## கல்லுளி செந்தூரம்.

கல்லுளியைக்கொண்டுவந்து காச்சி சீமைகாடியில்மூன்று திரம்தோய்த்து புளியாறை கொண்டுவந் தரைத்து விரல் கனமிருக்கும்படிமூடி மஞ்சளிலையினால் மூடிக்கட்டி ஆட்டு யெருமுட்டைசேகரித்து கெஜபுடமிட்டெடுத்து கலியாணமுருக்கம் பூ சாற்றில் ஒருஜாமமறைத்து கெஜபுடமிட்டு திரும்பவும் அப்படியே அறைத்து புடமிட்டு ஆரியபின் எடுத்து முலைப்பாலில் பணவிடையிட்டுக்கொடுக்க சுரந்தீரும் அல்லது தேனில் திரிகடுகுதூளிலும் கொடுக்கலாம் மகோதரம்தீரும் உத்தாமணிச் சாற்றில் பணவிடையாக வைத்துக்கொடுக்கவும் இப்படி பத்து நாள்கொடுக்க நீர்க்கோவை நீராம்பல் தீரும் இச்சாபத்தியம்.

## சண்டமாருத செந்தூரம்.

| | | |
|---|---|---|
| பூரம் | விராகனிடை | ௰ |
| லிங்கம் | ,, | ௰ |
| கெந்தகம் | ,, | க |
| இரச செந்தூரம் | ,, | க |

இவை கிரமப்படி சுத்திசெய்து நிருத்தெடுத்து இரண்டு ஜாம மறைக்கவும் பவழநிரம்போல் செந்தூரமாகும் பனவெல்லத்தில் அரிசியிடைவைத்து மூடி பல்லில் படாமல் விழுங்கச் செய்யவும் ஜன்னி பதிமூன்றும் சூலைவாய்வு புரவீச்சு யாவும் தீரும் இச்சாபத்தியம்.

## பஞ்சபாண செந்தூரம்.

| | | |
|---|---|---|
| லிங்கம் | பலம் | க |
| மனோசிலை | ,, | க |
| காந்தம் | ,, | க |

| | | |
|---|---|---|
| அரிதாரம் | ,, | க |
| கெந்தி | ,, | க |
| ரசம் | ,, | க |
| பூரம் | ,, | க |
| வெள்ளைபாஷாணம் | ,, | க |

இவைகளைக் கிரமப்படி சுத்திசெய்து நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு குப்பைமேனிச்சாற்றில்நாலுஜாமமறைத்து பில்லை தட்டி நிழலில் காயவைத்து பிரகு வெத்திலைச்சாற்றில் நாலு ஜாமமறைத்து பில்லைதட்டி நிழலில் ஆரியபின்னெடுத்து பருத்திச்சாற்றில் நாலுஜாம மறைத்து பில்லை செய்து நிழலி லிட்டு உலர்த்தியெடுத்து வெள்ளருகு சாற்றில் நாலுஜாமமிப்படியே துளசிச்சாற்றில் நாலுஜாமம், வழுதலைச்சாற்றில் நாலுஜாமம் அறைத்து பில்லைதட்டி நிழலிலுலர்த்தி வாய் அகலமுள்ள சட்டியில் வெத்திலையைப்பரப்பி அதின்மேல் ஷை பில்லையை வைத்து அதின்மேலும் வெத்திலையைப் பரப்பிப்போட்டு மூடி சட்டியின்வாய்திட்டத்திற்கு ஓடுமூடி சீலைமண் ஏழுசெய்து அடுப்பேற்றி சிறுதீயாகநாலுஜாமமெரித்துவந்தால் சட்டியெல்லாம் சிவந்துகாணும் அச்சமயம் தணல் நிருத்தி அடுப்பு ஆரியபின் எடுத்துப்பார்க்கசிந்தூரமாகும் அதையெடுத்து வயிரவன்முன் வைத்துபூசைசெய்து சர்வநோய்கட்கும்அனுபானமறிந்து பிரயோகம்செய்யவும், இஞ்சிச்சார்அல்லது தேன் அல்லது கியாழம் கற்கம்சூரணமிதுகளில் கையாடிவரில் ஜன்னி கரு, சூலை கஅ, வாதம் அச, மேகம் உக, கிராணி கூ, வண்டுமுதலிய விஷகடிகள் குஷ்ட்ட ஆரம்பம் இன்னும் கருமவியாதிகள் யாவும் தீரும் வியாதியரிந்து பத்தியம் வைப்பதே பரியாரிக்கழகாம்.

## அபிரேக செந்தூரம்.

| | | |
|---|---|---|
| அப்பிரேகம் | பலம் | உ |
| பனைவெல்லம் | ,, | உ |
| வெடியுப்பு | ,, | உ |

அப்பிரேகத்தை பொடிபொடியாய் பொடித்துக்கொண்டு மற்றயிருவகையும் கூட்டி ஜெலம்விட்டாட்டி பில்லைதட்டி நிழ

லுலர்த்தி ஓட்டில்வைத்துமேலோடுமூடி சீலைமண்செய்து காய வைத்து கெஜபுடத்தில் வைத்து ௯-ம் நாள் எடுத்துப்பார்க்க தளுக்குகள்மாரி பற்பம்போலிருக்கு மதையெடுத்து கல்வத்தி லிட்டு எருக்கம்பால் விட்டு ஒருஜாமம் அரைக்கவும் கல்வத் தோடு ரவியில் வைத்து காய்ந்தபின் மற்றுநாளும் எருக்கன் பால்விட்டு ஒருஜாமமரைத்து கல்வத்துடன் ரவியில் வைத்து மற்றுநாள் எருக்கன்பால்விட்டு ஒருஜாமம் அரைக்கவும் இப் படியே காயவைத்து காயவைத்து நாற்பதுநாள் அரைத்து நாற்பத்தியோராநாள் பில்லைதட்டிநிழலிலுலர்த்தி ஓட்டிலிட்டு வட்டில்போல மேலோடு பொருந்தமூடி ஏழுசீலைமண் செய்து குழித்தோண்டிய கெஜபுடத்திலிட்டு ஆரியபின் எடுத்துப்பார் க்க சிவந்திருக்கும் கல்வத்தில்பொடித்து பொற்றலைக்கையான் சாற்றில் நாலுஜாமமரைத்து பில்லைதட்டி காயவைத்து மறுநா ளும் அச்சாற்றால்தானேயரைத்து காயவைக்கவும் இப்படியிரு பத்தைந்துநாள் அரைத்தபிறகு பில்லை தட்டி ஓட்டிலிட்டு மே லோடுமூடி சீலைமண் நாலுசெய்து கெஜபுடத்திலிட்டாரியபின் யெடுக்க அருணனைப்போல் சிவந்து சிந்தூரமாம் சீசாவில் வைத்துக் கொள்ளவும் வியாதிக்குத் தக்க அனுபானங்களில் குன்றியளவுகொடுக்க சர்வவியாதிகளும்தீரும் பத்தியம்கிடையாது.

செந்தூரவதப்பு

முற்றிற்று.

---



கடவுள்துணை.

நான்காவது

# பற்ப வகுப்பு.

### கற்பூர சிலாசித்து பற்பம்.

கற்பூரசிலாசித்து ஒருபலம்கொண்டுவந்து வெந்தியத்தை யரைத்து விரல்கனத்திற்கு மேலே கவசம் செய்து காயவைத் தெடுத்து குக்கிட புடம்போட்டெடுக்கவும் நீராயிருக்கும் கவசம்நீக்கி சீசாவில்வைத்துக்கொள்ளவும் பசும்பாலில் அல்லது கசகசாப்பால் ஆழாக்கில் தம்பிடியிடைபோட்டுக்கலக்கிக்கொடுக்கவும் கற்பசூலை மாதவிடா யாகாமை சிரங்கு தினவு முதலியது தீரும் இச்சாபத்தியம்.

### சீனகார பற்பம்.

ஒருபலம் சீனகாரத்தையெடுத்து அகத்திப்பழுப்பை யரைத்துகவசிந்து அல்லது பசும்வெண்ணை தளமாய்கவசித்து சீலைசுத்தி (௰) எருவில் புடம்போட பற்பமாம் நெய்யில் தேனில் பாலில் குன்றியிடை போட்டு மத்தித்துகொடுக்க புண் சூடு கணமாந்தம் சொரி விரணங்கள்யாவும் தீரும் இச்சாபத்தியம்.

### பொட்டிலுப்பு பற்பம்.

ஆட்டெலும்பையிடித்துப்பொடித்து ஒருகலையத்திற்பரப்பி அதன்மேல் ஒருபலம்பொட்டிலுப்பைவைத்து அதற்குமேலும் அப் பொடியைப் பரப்பி மூடி மேலோடுபோட்டுப் பொருந்த

மூடிசீலைமண் (௩) செய்து குக்கிடபுடம் போட்டு ஆரியபின் னெடுத்து நன்றாய்பொடித்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் தேனில் நெய்யில் இஞ்சிசாற்றில் இவைகளில் யெதிலேனும் பணவிடை மத்தித்துக் கொடுக்க அஷ்டகுன்மமும் நீர்கட்டு உஷ்ணவாய்வும் தீரும் இச்சாபத்தியம் ஷை உப்பு பற்பத்தை நீராகாரத்திலும் கொடுக்கலாம்.

## கற்பூரபற்பம்.

ஒருபலம் கற்பூரத்தை சல்வத்திலிட்டு கற்பூரவல்லிச்சார் விட்டு ஒருஜாமம் அரைத்து பில்லைதட்டி நிழலில் காயவைத் தெடுத்து லேசானவட்டலோட்டியிலிட்டு மேலோடு மூடி சீலை மண் (௩) செய்து குக்கிடப்புடம் வைத்து ஆரியபின் எடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் வெத்திலையில் பணவிடை வைத்துத்தின்ன மலஜெலங்களையும் வாய்வும் தீரும் கபம் வில கும் வாய்நாற்றம் இவை தீரும் இச்சாபத்தியம்.

## திசைமுகபற்பம்.

| | | |
|---|---|---|
| இந்துப்பு | பலம் | க |
| வெடியுப்பு | ,, | க |
| கல்லுப்பு | ,, | க |
| அப்பளகாரம் | ,, | க |

இவையாவும் கோழியவரைச்சாற்றால் இரண்டு ஜாமம் அரைத்து உருண்டையாக்கி மண்கலையத்தில்போட்டு மேலோ டுமூடி சீலைமண் ஒன்று செய்து (கஉ) வரட்டியில் புடமிட்டு ஆரியபின்னெடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் பித்தத் தால்கண்டகைகால்வெடிப்பிற்கும் குன்மம் ஜன்னி சில வாய்வு கள் இவைக்கெல்லாம் அனுபான மறிந்துக்கொடுக்கவும் வியா திக்குத்தக்கினபத்தியம்வைப்பது பண்டிதரியல்பென்றறியவும்.

## தந்தநோய் சம்மாரி.

| | | |
|---|---|---|
| கல்லுப்பு | பலம் | க |
| அறப்பொடி | ,, | க |

| | | |
|---|---|---|
| கடுக்காய் | ,, | ச |
| சுக்கு | ,, | உ |
| காசுக்கட்டி | ,, | உ |
| பிச்சாங்கட்டி | ,, | க |
| களிப்பாக்கு | ,, | ௬ |

இவைகளை வெள்ளெருக்கன்பால்விட்டு இரண்டுநாள்முழுமையும் அரைத்து பில்லைதட்டி காயவைத்து குக்குட புடமிட்டெடுத்து சீசாவில் வைத்துக்கொண்டு பல் துலக்க இரத்தம் வருதல், சீழ்வருதல், அசைதல், ஆடல், குத்தல், கடுத்தல், யீருகரைதல், யிருவளர்தல் யாவும் தீரும் பல்லுகள் கெட்டிப்படும் வியாதி தீருமட்டும் சீதளவஸ்துக்களும் பழயதும் கூடாதென்றறிக.

## வெள்ளைபாஷாண பற்பம்.

| | | |
|---|---|---|
| பிரதண்டிச்சார் | படி | முக்கால் |
| வெள்ளைபாஷாணம் | பலம் | ஒன்றரை |

ஷை சாற்றை நன்றாய் பழகிய மண் பாத்திரத்தி லூற்றி அடுப்பேற்றி பாஷாணத்தை நூல்கயற்றால் கட்டி அச்சாற்றிற் படாமல் டோலாந்திரமாகக் கட்டி வாய்புரம் சில்லி குத்திய ஓட்டில் நூலை நுழைத்து மேலேகட்டிவிட்டு அவ்வோட்டிற்கு சீலைமண் ஒன்றுசெய்து (௬) ஜாமமெரிக்கவும் பிறகு யிறக்கி ஆறியபின் கலுவத்திலிட்டு பொடித்து சீசாவில் வைத்துக்கொண்டு முறைக்காச்சல் மலைக்காச்சல் முதலிய சர்வசுரத்திற்கும் அனுபானமறிந்து இரண்டு அரிசியிடை கொடுக்கவும் (௬-௫) வேளையில் தீரும்.

## வெண்கார பற்பம்.

அண்ட நீரில் சுத்தித்த வெண்காரம் பலம் (உ) நிறுத்தெடுத்து புளியிலைச்சாற்றில் ஒருஜாமம் அரைத்து பில்லை தட்டி காயவைத்து ஓட்டிலிட்டு வோடுமூடி சீலைமண் ஒன்றுசெய்து குக்குடபுடமிட பற்பமாம் சூடுநீர் சிகப்பு இதுகட்காம்.

## துருசுபற்பம்.



கருப்பஞ்சாற்றில் சுத்திசெய்த துருசுபலம் (உ) யெடுத்து பொடிதலையிலையை அறைத்து தளமாய் கவசம்செய்து குக்கிடபுடமிட்டாரியபின் எடுத்துகலுவத்திலரைத்துசீசாவில்வைத்துக்கொள்ளவும் இந்தபற்பத்தினால் வாதம் (அ) சுரம் (கூச) பித்தம் (சஅ) மேகம் (உக) குட்டம் (கஅ) சன்னி (கஙு) குன்மம் (அ) தோஷம் (அ) மூலம் (ச) ஆக்கிராணி (கூ) இவைகள் தீரும் இவைகட்கேத்த அனுபானங்களில் இதுவுமன்றி வியாதிக்கிசைந்தபத்தியம்வைப்பது பண்டிதர்கடமையாம்.

---

## வீரபற்பம்.

வீரம் கால்பலம் யெடுத்து அகலில்வைத்து கீழ்மேலும் நாய்மண்டை யோட்டையிடித்து பொடித்து கீழ்மேலும் தளமாய்வைத்து மைவீரம் நடுவிலிருக்கச்செய்து மேலேகல்மூடி சீலமண்-டு-செய்து-காடைபுடம்போட்டு ஆரியபின் யெடுத்து கல்வத்திலிட்டு பொடித்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் தேனில் ஒரு அரிசியிடை மத்தித்து பிரயோகித்தால் ஜன்னிதோஷங்கள் யாவுந்தீரும், ஜன்னியதிகரித்து பல்கிட்டிக்கொண்டால் அகப்பைக்காம்பு அல்லது கரண்டிகாம்பினால் பல்லைநீக்கி தேனில்மத்தித்துப்புகட்டவுந்தீரும் பத்தியமரிந்துவைக்கவும்.

---

## பூரபற்பம்.

| | | |
|---|---|---|
| பூரம் | பலம் | க |
| படிகாரம் | ,, | உ |

படிகாரத்தை சட்டியிலிட்டு அடுப்பேற்றி தீபாக்கினியாக எரிக்கையில் படிகாரம் உருகிவரும் உருகின சமயம்பார்த்து பூரத்தை அதினடுவில்சொருகி எரித்துக்கொண்டிருக்க படிகா

ரம் நன்ருய்பூர்த்தபின் எடுத்து பொடித்து சீசாவில்வைத்துக்கொள்ளவும் யிளநீரில்-௨-அரிசியிடைபோட்டுகுடிக்க மார்சளி, கபம், கோழை, யிருமல் இவைதீரும் இச்சாபத்தியம்.

---

## கெந்தகபற்பம்.

பள்ளமாயிருக்கும் பீங்கான்கோப்பையில்-௩௰ பலம்பனிக்கட்டியைப்போட்டு அதில்-௧௰ பலம் நெல்லிக்கெந்தியையிட்டு வெய்யலில்வைத்து நாலாநாளெடுத்து கெந்தியைமாத்திரம் அகலில்வைத்து மேலகல்மூடி சந்துவாய் சீலைமண் செய்து காடைபுடம் அல்லது இன்னொருவாட்டியும் அதிகப்படுத்திவைத்து ஆறியபின்னெடுத்து கலுவத்திலிட்டரைத்து சீசாவில்வைத்துக்கொள்ளவும் தேனில் அரிசியிடைகொள்ள பெரும் வியாதிமுதல் சகலவியாதியுந்தீரும் இச்சாபத்தியமிருக்கவும்.

பற்பவகுப்பு.

முற்றிற்று.

---

தேவி சகாயம்.

# ஐந்தாவது

# கட்டுவகை வகுப்பு.

## தாளகக்கட்டு.

கொடிபாதுளம்பழத்தைத் துளைத்து அதினுள் ஒருபலம் தாளகத்தைபொதிந்து சீலைமண்செய்து ம்-வரட்டியில் புடம் வைத்து ஆரியபின்னெடுத்து பத்னம்பண்ணிக்கொள்ளவும்.

## லிங்கக்கட்டு,

சிவன்வேம்பு சமூலம் அரைத்து லிங்கத்திற்கு கவசித்து அக்கவசத்துடனெடுத்து ஊமத்தங்காயை இரண்டாயரிந்து விரைபோக்கி ஷை மருந்தைவைத்து இருபில்லையும்மூடி சீலைமண்செய்து சாணம்போட்டு அப்பிகாயவைத்து முழப்புடத்தில்வைத்து ஆரியபின்யெடுக்கவும்

## பூரக்கட்டு.

ஒருபலம்பூரத்தை பீங்கானில்வைத்து காட்டத்திப்பூசார் அடித்து வெய்யலில் வைத்து சுண்டியபின் இன்னொருதரம் ஷை பாலையடிக்கவும் இப்படி மூன்றுவிசை யடித்தெடுத்து குமட்டியில் ஒருஜாமம் வாட்டியெடுத்து அப்பிரேகத் தகட்டில் மேல்வைத்து அடியில்தீபமேற்றி யெரிகாட்டவும் அப்படி எரிக்கையில் முசுமுசுக்கைச்சார் ஒருஜாமம்சுருக்குகொடுக்கவும்.

## கௌரிபாஷாணக்கட்டு.

கெவுரி பலம் ௧, நிறுத்தெடுத்து ஒட்டிலிட்டு அடுப்பேற்றி பேய்ப்பீர்க்கனில் நாலுஜாமஞ் சுருக்குக்கொடுத்து எடுத்துக்கொள்ளவும்.

## பாஷாணக்கட்டு.

---

கள்ளிமரத்தைத்துளைத்து அத்துளையில் பாஷாணம் ஒரு பலம்வைத்து துளைத்தெடுத்த தூளினால் தமர்அடைத்து முப்பதுனாள்சென்றபிறகு கோடி மாத்துடன் துண்டாயறுத்து காட்டெருவுமூன்றில் புடமிடவும இவ்வகைக்கட்டு பதத்துடன்செய்தவன் குருவாளியென்றும் தொழிலாளியென்றுஞ் சொல்வர்.

கட்டுவகுப்பு

முற்றிற்று.

---



உ

வேலுமயிலுந்துணை.

# ஆறாவது

# எண்ணெய்வகுப்பு.

## நாக்குப்பூச்சுக்கெண்ணை.

| | | |
|---|---|---|
| மிதிபாகயிலைச்சார் | படி | ௨ |
| கழற்சியிலைச்சார் | ,, | ௨ |
| விளக்கெண்ணை | ,, | ௨ |
| சுக்கு | விராகநிடை | க |
| வசம்பு | ,, | க |
| இரசகற்பூரம் | ,, | க |

ஷை சாறும் எண்ணெயும் ஒன்றாயூற்றி அடுப்பேற்றி சுக்கு, வசம்பை சமயிடையாயிடித்து வஸ்திரகாயஞ்செய்து கல்வத்திலிட்டு பூரமுங்கூடப்போட்டு விளக்கெண்ணெய் விட்டரைத்து கலக்கி யிறக்கிக்கொள்ளவும், வேளைக்கி உச்சிக்கரண்டியீதங்கொடுக்கவும் வயற்றிலுள்ள புழுக்கள் வெளிப்படும் இச்சாபத்தியம்.

## காப்பாணெண்ணை.

| | | |
|---|---|---|
| மிளகு | பலம் | க |
| சிறுகுறிஞ்சான்வேர் | ,, | க |
| நிலக்குமிழ்வேர் | ,, | க |
| வெள்ளுள்ளி | ,, | ௨ |
| வசம்பு | ,, | ௨ |

இவையாவுங் கல்லுரலில்போட்டு பஞ்சுபோலிடித்து அரைபடி நல்லெண்ணெயில்கலந்து அடுப்பேற்றி காச்சிவடித்து

வைத்துக்கொண்டு அந்திசந்தி விராகனிடை யெண்ணெய் உள்ளுக்குகொடுத்து மேலுக்கும் பூசவும்.

## சர்வகரப்பானெண்ணெய்.

| | | |
|---|---|---|
| சிறுகுறிஞ்சான் | பலம் | க |
| வனமல்லி | ,, | க |
| ஆகாசக்கெருடன்கிழங்கு | ,, | க |
| உள்ளி | ,, | க |
| அல்லித்தாமரை | ,, | க |
| மிளகருணை | ,, | க |
| சல்லிக்கொடி | ,, | க |
| நிலவிளா | ,, | க |
| வசம்பு | ,, | க |

இவைகள்யாவுஞ் சலவுரலிலிட்டு பஞ்சுபோல் நறுக்கி-ய-பலம் விளக்கெண்ணெயில்போட்டுக் கலக்கி மெழுகுபதத்தில் காச்சிவடிதது காலையில் கரண்டி வீதம ௩-ம் எ-நாள் கொள்ள சகலகரப்பானுந் தீரும்.

## தயிரெண்ணெ.

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | படி | உ |
| எருமைத்தயிர் | ,, | உ |
| இந்துப்பு | காசியிடை | ய |
| சுக்கு | ,, | ய |
| சித்திரமூலம் | ,, | ய |

கடைதினுசுகள் மூன்றும் யிடித்து வஸ்திரகாயம் செய்து தயிரெண்ணெ யாவும் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி கமலாக்கினியாக இரண்டுஜாமம் யெரித்திறக்கிவைத்துக்கொண்டு காலையில் உள்ளங்கையளவுசாப்பிடவும் கிராணிகழிச்சல் தீரும் பத்தியம் மேதிமோர்கூட்டி புசிக்கவும காரம்கூடாது.

## மேகத்திற்குகுளிர்த்தியெண்ணை.

| | | |
|---|---|---|
| பொன்னாங்கண்ணிச்சார் | படி | அரைக்கால் |
| பொடுதலைச்சார் | ,, | ,, |
| பிரமியிலைச்சார் | ,, | ,, |
| சாம்பிராணியிலைச்சார் | ,, | ,, |
| கொட்டைக்கரந்தைச்சார் | ,, | ,, |
| வெள்ளறுகுசார் | ,, | ,, |
| துணையிலைச்சார் | ,, | ,, |
| வல்லாரியிலைச்சார் | ,, | ,, |
| மணித்தக்காளியிலைச்சார் | ,, | ,, |
| முசுமுசுக்கைச்சார் | ,, | ,, |
| விளக்கெண்ணை | ,, | ௧வ |
| கடுகுரோகணி | பலம் | ௧ |
| ஜாதிக்காய் | ,, | ௧ |
| காட்டுபூசுணைவேர் | ,, | ௧ |

கடைசரக்கு மூனுவகையும் யிடித்து சூரணித்து யெண்ணை சார்யாவும் ஒன்றாயூற்றிகலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்காச்சி யிறக்கி காலையில் கரண்டிவீதம் (௭) நாளுண்ண மேகம்தீரும் இச்சாபத்தியம்.

---

## அண்டவாதயெண்ணை.

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணை | படி | வ |
| பொற்றலைகையான்சார் | ,, | வ |
| வெங்காயச்சார் | ,, | வ |
| ம - கடுக்காயின்தோல் | | |

கடுக்காய்தோலையிடித்து வஸ்திரகாயம்செய்து மற்றயாவும்ஒன்றாயூத்தி கலக்கி அடுப்பேற்றி மெழுகுபதமாய் காச்சி (௭-௯) நாள் கரண்டிவீதம் குடித்துவர அண்டவாதமகலும்.

## மேகத்தெண்ணை.

| | | |
|---|---|---|
| கருஞ்சீரகம் | விராகனிடை | ௧ |
| பரங்கிச்செக்கை | ,, | ௧ |

| | | |
|---|---|---|
| கழற்சிப்பருப்பு | ,, | க |
| சீரகம் | ,, | க |
| ரோகணி | ,, | க |
| பூரம் | ,, | க |

இவைகளையிடித்து வஸ்திரகாயம் செய்து (கால்படி) விளக்கெண்ணெயில் கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய் காச்சியிறக்கி கரண்டிவீதம் (எ-கூ) நாள்சாப்பிட வெள்ளை யனையாப் புதீரும்.

---

## தேங்காயெண்ணெ.

முத்தியதேங்காயை குடுமிகளைந்து ஒருகண்ணைத்திறந்து நீரை சோதித்து அதற்குபதில் சதுரகள்ளிப்பாலை நிரைத்து கார்க்கடைந்து (௩ு) நாள் மண்ணில்புதைத்தெடுத்து பூணகம் ௰)சேர்த்து கல்வத்திலிட்டரைத்து நல்லெண்ணெ (௨ படி யில்கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய் காச்சியிறக்கி கரண்டிவீதம்(எ)நாள்கொள்ள வாய்வு குத்தல் குடைச்சல் யாவும் தீரும் இச்சாபத்தியம்

---

## சேத்துமத்திற்கெண்ணெ.

| | | |
|---|---|---|
| கையாந்தகரைச்சார் | படி | வ |
| நல்லெண்ணெ | ,, | வ |
| ௰ கடுக்காய்த்தோலின்சார் | | |

இவையாவும் ஒன்றாயூற்றிக்கலந்து மெழுகுபதமாய் காச்சியிறக்கி கரண்டிவீதம்(௰ந) நாள்கொள்ள சேத்தும வியாதி யாவும் தீரும் இச்சாபத்தியம்.

---

## ஊஷ்ணத்திற்கெண்ணெ.

| | | |
|---|---|---|
| நாரண்டின்வேப்பம்பட்டை | பலம் | க |
| எருக்கண்வேர் | ,, | க |
| நொச்சிவேர் | ,, | க |
| முருங்கைவேர் | ,, | க |

| | | |
|---|---|---|
| கருநொச்சிவேர் | ,, | க |
| கொடிவேலிவேர் | ,, | க |
| ஆடாதொடைவேர் | ,, | க |

இவையாவும் கல்லுரலிலிட்டு பஞ்சுபோலிருக்கி பானையிலபோட்டு (ச) படி ஜெலம்விட்டு (அ) க்கொரு பங்காய் கியாழமிட் டிறக்கி அந்த கியாழமிடைக்கி சித்தாமணக்கெண்ணை கூட்டி ஆவின்நெய் உ-பலங்கூட்டி கலக்கி அடுப்பேற்றி மெழுகுபதமாய்காச்சி காலையிற் கரண்டிவீதம்-ஈ நாட்குடிக்க கருமேகந்தீரும், தாய்க்கும் பிள்ளைக்குங்கொடுக்கவும் கருங்கிரந்தி யாவுந்தீரும்.

---

# மேககருவலக்கெண்ணை

| | | |
|---|---|---|
| சுருள்பட்டை | பலம் | க |
| லவுங்கம் | ,, | க |
| லவுங்கப்பட்டை | ,, | க |
| கஞ்சா | ,, | க |
| சோம்பு | ,, | க |
| சிறுநாகப்பு | ,, | க |
| கருஞ்சீரகம் | ,, | ௩ |
| வெள்ளைப்பூண்டு | ,, | ௩ |
| மிளகு | ,, | ௩ |
| காட்டுசீரகம் | ,, | ௩ |
| சுங்கன்வேர் | ,, | க |
| சங்கங்குப்பி | ,, | க |
| சத்திச்சாரணைக்கிழங்கு | ,, | க |
| பரங்கிச்செக்கை | ,, | க |
| செங்கத்தாரிப்பட்டை | ,, | க |
| வசம்பு | ,, | க |

இவையாவுமிடித்து சூரணித்துவஸ்திரகாயஞ்செய்து விளக்கெண்ணெய் ஒருபடியில்விட்டு கலக்கி அடுப்பேற்றி மெழுகுபதமாய் காச்சியிரக்கையில் பூரம் கால்பலம்

பொடித்துப் போட்டு கலந்திரக்கி ரு-எ-நாள்கொள்ள மேகசூலை, வாய்வு, யாவுந்தீரும் சுட்டபுளி வருத்தஉப்பு கூட்டவும்

## குன்மத்திற்கெண்ணை.

பேய்க்கொம்மட்டிக்காய்ச்சாறு, சித்தாமணக்கெண்ணை சமநிறைசேர்த்து சுக்கு திப்பிலி மிளகு இந்துப்பு வகைக்கு ஒருவிராகனிடையெடுத்துப் பொடித்துக்கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்க் காச்சி யிரக்கி காலையில் காலணாயிடை சாப்பிட குன்மம் சத்திகுன்மம் இவைதீரும் (ரு-எ சு நாள் கொள்ளவும்.

## சிந்தாத்திரியெண்ணெய்

| | | |
|---|---|---|
| காயம் | பலம் | க |
| உள்ளி | ,, | க |
| கடுக்காய் | ,, | க |
| வாளம் | ,, | க |
| காட்டெருமைப்பால் | ,, | க |
| வெண்காரம் | ,, | க |
| இந்துப்பு | ,, | க |
| சீரகம் | ,, | க |
| வேலிப்பருத்திப்பால் | ,, | க |
| பூரம் | ,, | க |
| கஸ்தூரி | ,, | க |
| விளக்கெண்ணெ | வீசை | க |
| தேங்காய்ப்பால் | ,, | உ |

ஷை நிறுசுகள்யாவும் யிடித்து வஸ்திரகாயம்செய்து கல்வத்திலிட்டு தேங்காய்ப்பால்விட்டரைத்து யெண்ணெயிலிட்டுகலக்கி அடுப்பேற்றி மெழுகுபதமாய்காய்ச்சி யிரக்கையில் கஸ்தூரியை துளியெண்ணெ விட்டு அறைத்துக்கலந்து யிரக்கவும் (ச) களஞ்சிவீதம் காலையில்நிதம் சாப்பிடவும் இப்படி (ரு-எ-சு) நாள் கொள்ள மேகாதிகவிரோகங்

கள் சூலைஉஷ்ணவாய்வு கண்ணெரிச்சல் கிரந்தி பெரும்பா டு ஆமலக்கட்டி கீர்கட்டி இவைதீரும் இச்சாபத்தியம்.

# கலிங்காதியெண்ணெய்

| | | |
|---|---|---|
| தும்மட்டிக்காய்சாறு | படி | க |
| பசுங்கோமயம் | ,, | க |
| வெள்ளாட்டுகோமயம் | ,, | க |
| கடுக்காய் | பலம் | உ |
| கடுகுரோகணி | ,, | உ |
| ஏலம் | ,, | உ |
| வால்மிளகு | ,, | உ |
| சுக்கு | ,, | உ |
| திப்பிலி | ,, | உ |
| மிளகு | ,, | உ |
| மிளகரணைக்கிழங்கு | ,, | உ |
| பூண்டு | ,, | உ |
| வாளம் | ,, | உ |
| வளையலுப்பு | ,, | உ |
| இந்துப்பு | ,, | உ |
| சவுட்டுப்பு | ,, | உ |
| அப்பளாகாரம் | ,, | உ |
| சாரம் | ,, | உ |
| ஏவாச்சாரம் | ,, | உ |
| கண்டங்கத்திரிவேர் | ,, | க |
| சத்திச்சாரணைவேர் | ,, | க |
| வேளைவேர் | ,, | க |
| மஞ்சள்சார் | ,, | க |
| இஞ்சிச்சார் | ,, | ஐ |
| குமரிச்சார் | ,, | ஐ |
| நொச்சிச்சார் | ,, | ,, |

இம்மருந்திற்கூறிய கோமியவகையும் சாருவகையும் ஒன்றாயூக்கி சாக்குகள்யாவும் பிடித்து வஸ்திரகாயம் செ

ய்த வெண்ணெயை யடுப்பேற்றி சார்முதலிய சூரணம்யாவும் வொன்றாயூத்திக்கலக்கி காச்சி மெழுகுபதத்தில் யிரக்கி நிதம் காலையில் ஒ பலம் வீதமாக (ஙி-எ-கூ) நாள் தாப்பிட குன்மம் பித்தசூலை, பெருவயிறு, வாதம், வாய்வு, மகோதரம், நீர்க்கட்டி கவுச்சுக்கட்டி மேகம் (உக) கட்டுவாதம் இவையாவும் தீரும் இச்சாபத்தியம்

வெண்ணெய்வகுப்பு

முற்றிற்று.

---

கடவுள்துணை.

ஏழாவது

# தயிலவகுப்பு.

மாந்தத்தயிலம்.

| | |
|---|---|
| அருகம்புல் | பலம்-க |
| உசிலம்பட்டை | ,, க |
| மஞ்சள் | ,, க |
| மியக்கொழுந்து | ,, க |
| வெள்ளுள்ளி | ,, க |
| ஆத்துதும்மட்டிக்காய் உ | |

இவைகளையிடித்து சித்தாமணக்கெண்ணெய் அரைப்படியி ல்கலந்து அடுப்பேற்றி காய்ச்சிவடித்து உச்சிக்கரண்டிவீத ம் காலைவேளையில் (௩-௫-எ) நாள்கொடுக்க மாந்தம் பெரு மல் யாவும்தீரும்

மண்டைகரப்பானுக்குத் தயிலம்

| | |
|---|---|
| அவுரிவேர்பட்டை | பலம்-க |
| வெள்ளுள்ளி | ,, க |
| வசம்பு | ,, க |
| சுருள்பட்டை | ,, க |
| வலம்புரிக்காய் | ,, க |

இவைகளையிடித்து பொடித்து வஸ்திரகாயம்செய்து நல் லெண்ணெவிட்டரைத்து-ய-பலம் நல்லெண்ணெயிற்கலந்து

(க) நாள்சூரியபுடம் வைத்தெடுத்து தடவிவர மண்டைக் கரப்பான் முதலிய சிரங்குகளும் ஆரிவிடும்

---

புழுவெட்டிற்கு தயிலம்

ஏலம்பலம் (க) பழச்சாற்றிலரைத்து (எ) படிநல்லெண்ணெயில் கலந்து (அ) நாள் சூரியபுடம்வைத்தெடுத்து சனிவாரந்தோறும் (ரு) தலைமுழுக புழுவேட்டு கபாலகுட்டம் சூடு யாவுந்தணியும்.

---

தலைப்புழுவெட்டிற்கு தயிலம்.

சாரட்டைச்சார் வெத்திலைச்சார் நல்லெண்ணெ மிளகுலம் (வ) மிளகையும் (கஉ) மூட்டைப்பூச்சியும் யெண்ணெ விட்டரைத்து யாவும் ஒன்றாய்கலந்து சூரியபுடம் (ங) நாள்வைத்தெடுத்து தேய்த்துவர சவுக்கியமாகும்.

---

மயில்மாணிக்கத்தயிலம்.

| | | |
|---|---|---|
| சந்தணத்தூள் | பலம்- | அரை |
| வெண்மிளகு | ,, | அரை |
| மறமஞ்சள் | ,, | அரை |
| நிலப்பனங்கிழங்கு | ,, | அரை |
| வெட்டிவேர் | ,, | அரை |
| குருவேர் | ,, | அரை |
| மயிர்மாணிக்கச்சார் | படி | வ |
| சிறுகீரைச்சார் | ,, | வ |
| கையாந்தகரைச்சார் | ,, | வ |
| பொன்னாங்கண்ணிச்சார் | ,, | வ |
| முசுமுசுக்கைச்சார் | ,, | வ |
| நல்லெண்ணெ | ,, | வ |

முன்கூரிய சரக்குகள்யாவும் யிடித்துப்பொடித்து வஸ்திரகாயம்செய்து சார்வகையாவும் ஷை எண்ணெயிலபிரயோகி

த்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்காச்சி (௪)நாள்வட்டமா கதலைமுழுகிவர மயிர்உதிருவதை நிருத்தும் ஆலம்விழுது போல் கூந்தல்வளரும் தேகம்வெகு குளிர்ச்சியாயிருக்கும் திடகாத்திரமுண்டாகும்

---

## இராமபாணத்தைலம்

| | | |
|---|---|---|
| கோரைக்கிழங்கு | விராகனிடை | ௨௮ |
| பூண்டுசெடியின்வேர் | ,, | ௨,, |
| சந்தனத்தூள் | ,, | ௨,, |
| அதிமதுரம் | ,, | ௨,, |
| வில்லாமிச்சம்வேர் | ,, | ௨,, |
| வெட்டிவேர் | ,, | ௨,, |

இவையாவும் யிடித்து சூரணித்து நல்லெண்ணைபடி(௯) பசும்பால்படி-அறை இவ்விரண்டும் ஒன்ருய்கலந்து சூரணத்தைக்கொட்டி அடுப்பேற்றி மெழுகுபதமாய்காச்சி தலைமுழுகிவர சர்வவாதமும்போம்.

---

## ஜன்னித்தைலம்.

| | | |
|---|---|---|
| வசம்பு | விராகனிடை | ௨௮ |
| கடுகு | ,, | ௨௮ |
| உள்ளி | ,, | ௨௮ |
| காயம் | ,, | ௨௮ |
| சர்ப்பக்கண்டம் | ,, | ௨௮ |
| பூனாகம் | பலம் | வ |
| வேப்பெண்ணை | படி | ௮ |
| நல்லெண்ணை | படி | ,, |

ஷெ மருந்துகள் யிடித்து பொடித்துப்போட்டு யாவும்ஒன்ருய்கலந்து மெழுகுபதமாய்காச்சி யிரக்கையில் கஸ்தூரி வ-விராகனிடைபோட்டு கலந்திறக்கிக்கொண்டு அருணோதயத்திற்குமுன் தலைக்குதேய்த்து முழுகி சூப்புசர்தம் சாப்பி

டவும் கண்ணில்படக்கூடாது பகலில் நித்திரைகூடாது இப்படி-கூ-ரு-தலைமுழுக ஜன்னிதலையில் விடாநோய் புரங்கமூத்திசுவுயர் வும்தீரும்

---

## கொம்பரக்குத்தயிலம்.

| | | |
|---|---|---|
| சித்தாமுட்டிவேர் | பலம் | ரு |
| அமுக்கிராவேர் | பலம் | ரு |
| சுக்கு | விராகனிடை-உ | ,, |
| திப்பிலி | ,, | உ,, |
| மிளகு | ,, | உ,, |
| கடுக்காய் | ,, | உ,, |
| நெல்லிக்காய் | ,, | உ,, |
| தான்றிக்காய் | ,, | உ,, |
| மஞ்சள் | ,, | உ,, |
| மரமஞ்சள் | ,, | உ,, |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | உ,, |
| வெட்டிவேர் | ,, | உ,, |
| தேவதாரம் | ,, | உ,, |
| விலாமிச்சம்வேர் | ,, | உ,, |
| சாரணைவேர் | ,, | உ,, |
| லவுங்கப்பட்டை | ,, | உ,, |
| ஏலம் | ,, | உ,, |
| இந்துப்பு | ,, | உ,, |
| அதிமதுரம் | ,, | உ,, |
| ஜாதிக்காய் | ,, | உ,, |
| நல்லெண்ணெ | படி | க |
| பசுமோர் | படி | க |

கடைசரக்குகள் யாவும்பிடித்து வஸ்திரகாயம்செய்துமோரும்மெண்ணெயும் ஒன்றாய்க்கலந்து அதிற்போட்டு அடுப்பேற்றி மெழுகுபதமாய்க்காய்ச்சி வடித்து (ச) நாள் வட்டமாகத் தலைமுழுகிவரில் கைகாலெரிவு மேகச்சூடு காங்கை யாவுந் தணியும் தேகம்புஷ்டியாம்ஜன்னி சயித்தியம்தீரும்.

## ஜெயவயிரவத்தைலம்.

—(-*-)—

| | | |
|---|---|---|
| தாளகப் | விராகனெடை | ௫ |
| கெந்தி | ,, | ௫ |
| மனோசிலை | ,, | ௫ |

இம்மூன்றும் கலுவத்திலிட்டு காடிவார்த்தரைத்து மெல்லிய சீலையில் பூசிக்காயவைக்கவும் காய்ந்தபிறகெடுத்து திரும்பவும் பூசிவத்திபோல்திரித்துகாயவைத்தெடுத்துஒருமுகனையைவிளக்கில்கொளுத்தியெரியும்போது தலைகீழாய்ப்பிடிக்க சுடர்தயிலமிறங்கும் அந்தத்தயிலத்தை சீசாவில்பிடித்து வைத்துக்கொண்டு வெத்திலையில்-௧-௨-௩-துளிவரையில் விட்டுமடித்து தின்னதலைநடுக்கல்தேகம் நடுக்கல் கை கால்நடுக்கல் இவைதிரும் நரைதிரைமாறும் இச்சாபத்தியம்.

---

## வில்வாதித்தைலம்.

| | | |
|---|---|---|
| சந்தனத்தூள் | பலம் | ௨ |
| சுக்கு | ,, | ௧ |
| திப்பிலி | ,, | ௧ |
| மிளகு | ,, | ௧ |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | ௧ |
| கோரைக்கிழங்கு | ,, | ௧ |
| ஏலத்தூள் | ,, | ௧ |

(௰) பலம்வில்வவேர்பட்டையை கொண்டுவந்து பஞ்சுபோல்யிடித்துயெட்டுபடி ஜெலத்திலிட்டு ஒருபடியாகக் காச்சிய கியாழத்தைவடிக்கட்டியெடுத்து அத்துடன் நல்லெண்ணெய்படி(௧) இரண்டும்ஒன்றாய்ப்பூர்த்திக்கலந்து அடுப்பேற்றி யெரிக்கையில் ஷை சரக்குகளைபொடித்து வஸ்திரகாயஞ்செய்து காய்கிறயெண்ணெயில்போட்டுக்கலந்து மெழுகுபதமாய் காச்சி யிறக்கியாலையில் - ௪-நாள்வட்ட

மாகத் தலைமுழுகிவரில் கண்புகைச்சல்மேகயிருமல் ரத்தமூலம்வ ரட்சி மேகம்வாதம் பித்தம் இத்தகைவியாதி யாவும்தீரும்.

---

# சந்தனாதிதைலம்.



| | | | | | |
|---|---|---|---|---|---|
| நல்லெண்ணெ | படி | க | மூத்தக்காசு | ,, | உ |
| ஊற்றுஜெலம் | ,, | க | தாமரைப்பு | ,, | உ |
| பசும்பால் | ,, | க | நன்னாரிவேர் | ,, | உ |
| நெல்லிவிரை | பலம் | உ | லவுங்கப்பத்திரி | ,, | உ |
| சந்தனத்தூள் | ,, | உ | சேவதாரம் | ,, | உ |
| ஏலம் | ,, | உ | அதிமதுரம் | ,, | உ |
| வெட்டிவேர் | ,, | உ | தனியா | ,, | உ |

முன்னுரைத்தயெண்ணை மோர்ஜெலம் இம்மூன்றும் ஒன்றுப டவைத்திக்கலந்து அடுப்பேற்றி யெரக்கவும்பின்கூரிய மருந்துகள் யாவும்யிடித்து வஸ்திரகாயம்செய்து தைல பாண்டத்தில் போட்டு கலக்கி மெழுகுபதமாய்காச்சி வடித்து தலைமுழிகிவரில் பித்தசா லேசுரம் மூதல்மேகவியாதிகள் யாவும் தீரும்.



# நெய்சிட்டித்தைலம்.

| | | |
|---|---|---|
| பசும்நெய் | படி | ஐ |
| நல்லெண்ணெ | ,, | ஐ |
| நெய்சிட்டிசார் | ,, | ஐ |
| வெட்டிவேர் | பலம் | உ |
| நெய்தல்கிழங்கு | ,, | உ |
| அதிமதுரம் | ,, | உ |
| சந்தனம் | விராகனிடை | உ |
| நன்னாரி | ,, | உ |
| பச்சிலை | ,, | உ |

| | | |
|---|---|---|
| கிச்சிலிக்கிழங்கு | ,, | ௨ |
| மிளகு | ,, | ௨ |
| சீரகம் | ,, | ௨ |

இவையாவும்பிடித்து வஸ்திரகாயம்செய்துநெய் யெண்ணைசாரயாவும்ஒன்றாயூற்றி கலந்து அடுப்பேற்றி யிளம்பதமாய்காச்சியிரக்கிதலைமுழுகிவரில் கண்புகைஉஷ்ணம் காந்தல்குடுவெள்ளைமேகம் தீரும்.

## பற்பவகுப்பு.





உ

தேவிசகாயம்.

---

எட்டாவது

# லேகியவகுப்பு.

## சோகைகாமாலைக்கு லேகியம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | விராகனிடை | கூ | கடுக்கா | விராகனிடை | கூ |
| திப்பிலி | ,, | கூ | சிறுதேக்கு | ,, | கூ |
| மிளகு | ,, | கூ | அரத்தை | ,, | கூ |
| சாதிக்காய் | ,, | கூ | ரோகணி | ,, | கூ |
| ஓமம் | ,, | கூ | காட்டுசீரகம் | ,, | கூ |
| சீரகம் | ,, | கூ | சோம்பு | ,, | கூ |
| கிராம்பு | ,, | கூ | கழற்சிப்பருப்பு | ,, | கூ |
| இஞ்சி | ,, | கூ | | | |

இவைகளைபிடித்து சூரணித்து வஸ்திரகாயம் செய்து அவ்விடைக்குச்சரியாய் வெள்ளாட்டுப்புழுக்கையைசூரணித்துசேர்த்து

| | | |
|---|---|---|
| கையான்சார் | படி | க |
| பசும்நெய் | ,, | உ |
| பனங்கற்கண்டு | பலம் | எ |

நெய்யும்சாறும் ஒன்றாயூற்றி அடுப்பேற்றிசற்றுநேரங்காய்ந்தபிறகுசூரணத்தை கொஞ்சங்கொஞ்சமாய் தூவிக்கொண்டேகிளரிவரவுமயாவும் தீர்ந்தபிறகு பனங்கற்கண்டை தூவிக்கிளரவும் லேகியம்பதிரதபாகமாய் கிளரி யிரக்கிவைத்துக் கொண்டு நெல்லிக்காய்விதம் காலைஒருவேளையாக உ௰-சம-நாள்கொள்ளநீர்கோர்வைகுன்மம்சோகை காமாலை நெஞ்செரிவுஅக்கினிமந்தம் இவையாவும் தீரும்.

## முயல் லேகியம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அரத்தை | பலம் | உ | தூதுவேளை | பலம் | க |
| பரங்கிச்செக்கை | ,, | உ | கண்டங்கத்திரி | ,, | உ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தாளிசப்பத்திரி | ,, | க | மிளகு | ,, | கஉ |
| லவங்கப்பத்திரி | ,, | உ | பழுப்புச்சர்க்கரை | | ௰ரு |

சற்கரைதவிர மற்றவைகளைப்பிடித்து சூரணித்து வைத்துக் கொண்டுமுயல்கறி ௰-பலங்கொண்டுவந்துஜெலம்விட்டுஇரணவேளைச கழுநி பாண்டசட்டியிலிட்டு நீர்சுண்டுமட்டும்பிரட்டி -௰-பலம் நெய்யைஅடுப்பேற்றி ஷை கறியையும்சூரணத்தையுங் கொட்டிகிளரி லேகியபதமானவுடன் ௩-பலந்தேன்விட்டு ரேகித்து இரக்கிவைத்துக்கொண்டு புன்னைக்காய்வீதம்௰-உ௰-௩௰-நாள் வட்டமாகத்தின்றுவரவும் பொடி, புகை, போகம்,லாகிரிவெத்திலைப்பாக்கு இவையாகாது க்ஷயம், யீளைப்பிருமல், காசம்,இதுகள் தீரும்.

---

## தேத்தான்கொட்டைலேகியம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தேத்தான்கொட்டைபலம் | - | ௩ | ஏலம் | பலம் - | உ |
| கருஞ்சீரகம் | ,, | உ | சீரகம் | ,, | உ |
| திப்பிலி | ,, | உ | விதைநீக்கியகடுக்காய் | ,, | க |
| மிளகு | ,, | உ | ஜாதிக்கா விராகனிடை | - | க |
| சுக்கு | ,, | உ | லவங்கம் | ,, | க |

இவைகளைதனித்தனியாய் நெய்யில்வருத்துப்பொடித்துதேன்பலம் (௰ரு) அடுப்பேற்றி சூரணத்தைகொட்டிகிளரி வருகையில்(௰) பலம்சக்கரைபோட்டுக் கிண்டி பாகுபதமாயிரக்கிவைத்துக் கொண்டு கெச்சக்காய்வீதம் இருவேளையும் தின்றுவரவும் வெள்ளைமேகம்தீரும் தாதுபுஷ்டியாம்,

---

## வச்சிரகண்டி லேகியம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மதனகாமப்பூ | பலம் - | க | அதிவிடையம் | பலம் - | க |
| கிராம்பு | ,, | க | அபினி | ,, | க |
| ஏலம் | ,, | க | சுக்கு | ,, | க |
| காட்டாத்திப்பூ | ,, | க | சப்சாவிரை | ,, | க |
| கசகசா | ,, | க | ஜாதிக்காய் | ,, | க |
| வாலுழுவை | ,, | க | | | |

இவைகளையிடித்து வஸ்திரகாயம்செய்து வைத்துக்கொண்டு (ய)பலம்பனைவெல்லம பாகுபிடித்துஅந்தப்பாகில்சூரணத்தை தூவிக்கிளரி முதிராகபதத்தில் யிரக்கிவைத்துக்கொண்டு அந்திசந்திஇருவேளையும் கொட்டைப்பாக்குவீதம் தின்றுவரசுர அனல் மந்தச்சல் குழந்தைகள்கோளை மாந்தம்அதிசாரபேதி இரத்தபேதிகிராணி இவைதீரும் போகத்திஇன்பங்கொடுக்கும் இந்திரியங்கட்டும்.

---

## மூலத்திற்குலேகியம்.

சாயுருவியிலே ஒருருக்குபரித்துலந்து அத்துடன் ஒருபிடி பூங்கலரிசிலைத் கரைத்துகொஞ்சம்ஜெலம்விட்டு கரைத்துஅடுப்பேற்றியெரிக்கவும் அப்படியெரிக்கையில் நாட்டுச்சக்கரை (ரு) பலம்போட்டு பசும்நெய் மூனு பலம்விட்டு கிளரிபாகு பதமாயிரக்கிவைத்துககொண்டு இருவேளையும்புன்னக்காய் வீதம்சாப்பிட்டு வரவும் மூலவேதனைதீரும் இச்சாபத்தியம்.



## மகாபூரணதிலேகியம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | பலம் | உ | சடாமாஞ்சி | ,, | உ |
| சோம்பு | ,, | உ | கசகசா | ,, | க,உ |
| கோஷ்டம் | ,, | உ | விலாமிச்சன்வேர் | ,, | உ |
| சுக்கு | ,, | உ | நன்னாரிவேர் | ,, | உ |
| ஆனைத்திப்பிலி | ,, | உ | வெட்டிவேர் | ,, | உ |
| வால்மிளகு | ,, | உ | நீர்முள்ளிவிரை | ,, | க |
| சீரகம் | ,, | க | அத்திவிரை | ,, | க |
| கடுக்காய் | ,, | க | ஆலம்விழுது | ,, | க |
| கனியா | ,, | க | அரசன்விரை | ,, | க |
| தாளிசப்பத்திரி | ,, | உ | பூனைக்காலிவிரை | ,, | க |
| ஜாபத்திரி | ,, | உ | வெள்ளரிவிரை | ,, | க |
| ஜாதிக்காய் | ,, | க | சப்சாவிரை | ,, | க |
| லவுங்கம் | ,, | உ | தாலம்கானு | ,, | க |
| லவுங்கப்பட்டை | ,, | உ | சபேத்துமுசலி | ,, | க |
| சன்னாரஷ்டம் | ,, | உ | வாதுமைப்பருப்பு | ,, | உ |
| பெருலவுங்கப்பட்டை | ,, | உ | சாரப்பருப்பு | ,, | உ |
| இலப்பனங்கிழங்கு | ,, | க | முந்திரிப்பருப்பு | ,, | உ |

பருப்புதினுசுகள்தவிர மற்றயாவும்வெய்யலில் உலர்த்தியிடித்துவஸ்திரகாயம்செய்து வைத்துக்கொண்டு (௨௭) பலம்கெஞ்சா கொண்டுவேந்து மெல்லிய சீலையில் முடிக்து இரண்டுபடி பாலில் போட்டு காச்சிபுரைக்குத்திமறுநாள்காலையில்கடைந்துவெண்ணெயெடுத்து அந்தவெண்ணெயை அயச்சட்டியிலிட்டு உருக்கி அதில்மேற்படி சூரணத்தை கொஞ்சங்கொஞ்சமாய் தூவிக்கிளரிவரவும்அப்படிகிளரயில் கற்கண்டு (௰) பலம்போட்டுகிளரவும் பிரகுதிராட்சிபழம்பலம் (௫) போடவும்அதன்பிரகு மேற்படி பருப்புவகைகளைபோட்டு ரேகிக்கையில்தேன் போதுமான வரைக்கும கொஞ்சங்கொஞ்சமாய்விட்டு கிண்டிபாகு பதமாயும்லேகியம் முதிராமலும் தகுமானபதத்தில் வந்தவுடன்இரக்கி பிங்கான்கோப்பையில் வைத்துக்கொண்டு (௨௰) அல்லதுஒருமண்டலம் அந்திசந்தி தின்றுவரவும் மேகத்தாற்சார்ந்த வியாதிகளையும்கண்டிக்கும் புணர்ச்சியில் வெகுவலிவுகொடுக்கும் லேகியம்கட்டுவிடாது ஆனால் லேகியம்தின்னும்போது புணரப்படாது கள்சாராயமுதல்யான வேறுலாகிரியருந்தக்கூடாது.

---

## போசனசஞ்சீவிலேகியம்,

| | | | | |
|---|---|---|---|---|
| இந்துப்பு | பலம் | ௧ | பொரித்தபொரிகாரம் | ௧ |
| பொட்டிலுப்பு | | ௧ | பொரித்தவெண்காரம் | ௧ |
| கல்லுப்பு | | ௧ | சுக்கு | ௧ |
| வளையலுப்பு | | ௧ | திப்பிலி | ௧ |
| கரியுப்பு | | ௧ | மிளகு | ௧ |
| சோத்துப்பு | | ௧ | ஓமம் | ௧ |
| கிராம்பு | | ௧ | திப்பிலிமூலம் | ௧ |
| சோம்பு | | ௧ | கோஷ்டம் | ௧ |
| லவுங்கப்பு | | ௧ | காயம | ௧ |
| செண்பகப்பு | | ௧ | உமமண் | ௧ |
| சிறுநாகப்பு | | ௧ | புட்டிவெல்லம் | ௰ |
| கடுக்காப்பு | | ௧ | வெள்ளுள்ளி | ௫ |

வெல்லமும்உள்ளியும்தவிர மற்றவைகளையிடித்து சூரணித்து வைத்துக்கொண்டுவெல்லம் நீர்க்கப்பாகுசெய்து உள்ளியைப்போட்டுரோகித்து ஷை சூரணத்தைச்சிறுகத்தூவிக்கிண்டி பாகுபதமும் லேகியபக்குவமுமாகக் கிளரவும் பாகும்போதாவிட்டால்நெய் சிறுகவிட்டுக்கிண்டி யிறக்கிக்கொள்ளவும்-உ௰-நாள்சுண்டைக்காய்விதம் கொள்ள சோகைவயற்றிற்கட்டி மூலம்-குன்மம - மூலக்கிராணியிவையாவும் தீரும் அஜீர்ணமந்தம்-வாய்வு சூதகவாய்வுகளும்தீரும் இச்சாபத்தியம்.

## லேகிய வகுப்பு.



உ

வேலுமயிலுந்துணை.

## ஒன்பதாவது

# சூரணவகுப்பு.

### நித்திரையற்றவாய்விற்கு

### சூரணம்.

| | | |
|---|---|---|
| ஏலம் | விராகனிடை | க |
| செஞ்சந்தணம் | ,, | க |
| சந்தணத்தூள் | ,, | க |
| தேத்தான்கொட்டை | ,, | க |

இவைகளின் சூரணம் சமயிடைக்கு சற்கரை சமயிடைகூட்டி பூசணைக்காய் சார் ஆழாக்குப்பிழிந்தெடுத்து மேற்படிசூரணமும் அவிராகனிடை கூட்டிக்கலக்கி சாப்பிடவும் ௩-௫-எ-௯-நாள் கொள்ள பித்தவாய்வு நீரோறினவாய்வு யாவும்தீரும் நித்திரை பிடிக்கும்,

### பித்தமயக்கத்திற்கு சூரணம்

| | | |
|---|---|---|
| சீரகம் | பலம் | க |
| நெல்லி | ,, | க |
| முள்ளி | ,, | க |
| சுக்கு | ,, | க |

இவைகள் வகைக்கு சமன் கொண்டித்துசூரணித்து அவ்விடைக்கு சமன் சற்கரைகூட்டி. வேளைக்கு காலணாயிடையாக யெடுத்து தேன்விட்டு மத்தித்து சாப்பிடவும் இப்படி இருவேளையும் 10 தினமுண்ண பித்தமயக்கம்-தீரும்-இச்சாபத்தியம்.

## ஐபேதிச்சூரணம்

| | | |
|---|---|---|
| சுக்கு | பலம் | அரை |
| திப்பிலி | ,, | ,, |
| மிளகு | ,, | ,, |
| கடுக்காய் | ,, | ,, |
| தான்றிக்காய் | ,, | ,, |
| நெல்லிக்காய் | ,, | ,, |
| லவுங்கம் | ,, | ,, |
| சிறுநாகப்பு | ,, | ,, |

இவைகளை யிடித்துப் பொடித்து சூரணித்து சமஞ்சிடை சர்க்கரைக்கூட்டி மூனேமுக்கால் விராகிடையெடுத்து தேனில்குழைத்துகாலையில் சாப்பிடவும் உ-ரு-விசை பேதியாகும் பித்த வாய்வு தீரும் உ-ரு-நாட் கொள்ளவும்.



## திலாவேஸாரசசூரணம்,

| | | |
|---|---|---|
| திலாவிரை | பலம் | ச |
| ஏலம் | ,, | க |
| கடுக்காய்பூ | ,, | க |
| சுக்கு | ,, | க |
| திப்பிலி | ,, | க |
| மிளகு | ,, | க |
| நெல்லிப்பருப்பு | ,, | க |

இவைகளையிடித்து சூரணம்செய்து திருகடிபிரமாணம் வென்னீரிற்போட்டு சாப்பிடவும் ரு-ச-விசைபேதியாகும் வாய்வுகளையும் வாதபித்தநீர்கள் சமரசப்படும்,



## சுகபேதிசூரணம்,

பசும்பாலில் வேகவைத்தெடுத்த சிவதைவேர் பலம் ரெண்டரை இதையிடித்து சூரணித்து சக்கரை ரெண்டரைபலம்போட்டுசேரா

வில் வைத்துக்கொண்டு வேருகடி தூளெடுத்து வென்னீரிற் போட்டருந்த சுகமாய் பேதியாம் ஆபாசமிராது,

## இரத்தபேதிக்குசூரணம்.

| | | |
|---|---|---|
| கடுக்காப்பு | விராகனிடை | க |
| லவுங்கப்பட்டை | ,, | க |
| கிராம்பு | ,, | க |

இவைகளை சிவக்கவருத்து பொடித்துசூரணித்து ஒன்ருய்க்கலந்து சூ-பங்காகப்பிரித்து பசும் வெண்ணெயில் குழைத்துசாப்பிடவும் சுவஸ்தமாம் காரமில்லாத பொசிப்பெடுக்கவும்,

## தீபனச்சூரணம்,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | அரை | நவாச்சாரம் | பலம் | அரை |
| திப்பிலி | ,, | ,, | சத்திசாரம் | ,, | ,, |
| மிளகு | ,, | ,, | பூநீரு | ,, | ,, |
| சிறுதேக்கு | ,, | ,, | பெருங்காயம் | ,, | ,, |
| ஓமம் | ,, | ,, | இந்துப்பு | ,, | ,, |
| சித்திரமூலவேர்பட்டை | ,, | ,, | பஞ்சலவணம் | ,, | ,, |

இவையாவும் யிடித்து சூரணித்து சீசாவில் வைத்துக்கொண்டு திருகடிபிரமாணம் யெடுத்து வென்னீரில்போட்டுக் குடிக்க மந்தம்அஜீர்னம் இவையாவும் போக்கும் பசிதீபன முண்டாம்.

## இங்குளாதிச்சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெருங்காயம் | விராகனிடை - | க | ஜாதிக்கா | விராகனிடை - | ரு |
| வசம்பு | ,, | உ | கடுக்காய் | ,, | சா |
| லவணம் | ,, | ங | தாமரைசமூலம் | ,, | எ |
| சுக்கு | ,, | ச | கோஷடம் | ,, | அ |

இவையாவும்கூட்டி சூரணித்து வேளைக்கு ரு-விராகனிடையாகக்கொண்டு வென்னீரில் குழப்பிசாப்பிடவும் குன்மசாந்தியாம்சில வாய்வுகளை கண்டிக்கும்.

## ஷ சூலை சூரணம்,

இலைக்கள்ளிவேரின் மேற்றோலைக்கிழித்தெடுத்து ரவியிலுல ர்த்து யிடித்து சூரணித்துவைத்துக்கொண்டு விராகனிடை சூரண த்தை நெய்யில் குழைத்து சாப்பிடவும் ரு-ரு-எ-கூ-கக நாள் வீக மாயுண்ண சூலைவலிநீங்கும் மற்றயிருமல் யாவும் சாந்தியாம்,

## இருமற்சூரணம்,

| | | |
|---|---|---|
| ஆடாதோடை | பலம் | ரெண்டரை |
| கடுக்காய் | ,, | ,, |
| கண்டங்கத்திரி | ,, | ,, |
| தூதுளை | ,, | ,, |
| அதிமதுரம் | ,, | ,, |

இவைகளை யிடித்து பொடித்து சூரணித்து வஸ்திரகாயஞ்செ ய்து வைத்துக்கொண்டு திருகடிபிரமாணம் யெடுத்து நெய்யில்கு ழைத்து சாப்பிடவும் இப்படி இருமண்டலம் கொள்ள இருமல் யீளை கபம் கோழை இவைகள் சாந்தியாம்,

## தனிமூலிச்சூரணம்,

நூருவருடத்திய வேப்பமரத்தின் துளிரும் அம்மரத்தினதுவேரி ன் மேற்பட்டையும் சமமாய் கிருத்தெடுத்து உலர்த்தி யிடித்து வ ஸ்திரகாயம்செய்து சமனிடை சக்கரைகலந்து சீசாவில் வைத்துக் கொண்டு வேளைக்கு (காலணாயிடைபாக) இருவேளையும் சம்நா ள்கொள்ளவும் சூதம்உடையும் தூலதேகம் கரையும் மேகங்களைக் கண்டிக்கும் வாய்வுயென்பவையெல்லாம் கடல்கடந்தோடும்தினா மாறும் கண்ணொளிவுண்டாம் காயசித்திக்கு சமானமென அனேக பண்டிதரும் சொல்லுவார் இச்சாபத்தியம்.

## பஞ்சசக்கினிசூரணம்,

| | | |
|---|---|---|
| மருள்கிழங்கு | பலம் | க |
| புளிக்கருணைகிழங்கு | ,, | க |

| | | |
|---|---|---|
| காட்டுக்கருணைக்கிழங்கு | ,, | ௧ |
| பிரண்டைக்கிழங்கு | ,, | ௧ |
| சித்திரமூலவேர்பட்டை | ,, | ௧ |
| பரங்கிச்செக்கை | ,, | ௧ |

இவையாவும் வெய்யிலிலுலர்த்தியிடித்து சூரணித்து வஸ்திரகாயம்செய்து சீசாவில்வைத்துக்கொண்டு தினம் காலையில் ௪-விராகனிடை சூரணம்யெடுத்து பசும்மோரு ஆழாக்கில் கலந்து குடிக்கவும் இப்படி ௰-௨௰ நாள்கொள்ள வலலைக்கட்டி காச்சல்கட்டி நீர்கோவை குன்மம் இவைபோம் இச்சாபத்தியம்.



## சூலைச்சூரணம்,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சித்திரமூலம் | பலம் | ௧ | வலம் | பலம் | அரை |
| ஓமம் | ,, | அரை | சுக்கு | ,, | ௧ |
| பெருந்தேக்கு | ,, | ,, | திப்பிலி | ,, | ௧ |
| இந்துப்பு | ,, | ,, | மிளகு | ,, | ௧ |
| லவணம் | ,, | ,, | எவாச்சாரம் | ,, | ௧ |
| காயம் | ,, | ,, | | | |

இவைகளை இடித்து வஸ்திரகாயம்செய்து சீசாவில் வைத்துக்கொண்டு மூவிரல்சூரணம்யெடுத்து வெனனீர்ப்போட்டுகலக்கிசாப்பிடவும் சூலைகட்டுதீரும் தீபனமுண்டாகும் வாய்வுஅண்டாது தேகம்லேசாயிருக்கும் இச்சாபத்தியம்.

## வால்மிளகுசூரணம்.

| | | |
|---|---|---|
| வால்மிளகு | விராகனிடை | ௫ |
| சீரகம் | ,, | ௫ |
| கொத்தமல்லி | ,, | ௫ |
| கற்கண்டுதூள் | ,, | ௫ |

இவையிடித்து சூரணித்து கற்கண்டுதூளும் கூட்டி வெள்ளையில் ௪ விராகனிடைசூரணமிட்டு குழப்பி சாப்பிடவும் இப்படி அந்திசந்தி ௰-நாள்கொள்ள வெள்ளை வீழ்தலும் தீரும் சூடு அனல்மேககாங்கை நீர்சுருக்குதீரும் இச்சாபத்தியம்.

## மதனகாமேசுரசூரணம்.

| | | |
|---|---|---|
| அதிமதுரம் | பலம் | க |
| அமுக்கனங்கிழங்கு | ,, | க |
| பூசணையின்வேர் | ,, | க |
| நரிபயற்றம்வேர் | ,, | க |
| உளுந்துசெடியின்வேர் | ,, | க |
| முந்திரிவேர் | ,, | க |
| நிலப்பனங்கிழங்கு | ,, | க |
| நெல்லிவித்து | ,, | க |
| இலவன்பிசின் | ,, | ௩ |
| முருங்கைப்பிசின் | ,, | ௩ |

இவையாவும் யிடித்து சூரணித்து அவ்விடைக்கு அறையினிசீனிகூட்டி கலந்து சீசாவில்வைத்துக்கொண்டுஉ-விருகனிடை சூரணமெடுத்து காச்சியதேனிற் குழைத்துத்தின்னவும் தின்னவுடன் ஆழாக்குபால் சாப்பிடவும் மாலை ௬-மணிவேளையாக 20-நாள் தின்னவும் புகை புளி போகம் லாகிரிகூடாது உக-வது நாள் போகிக்கவும் மிகுந்த பின்பத்தோடு லேகில் கட்டுவிடாது தாதுபுஷ்டியாம்,

## மாங்கொட்டைசூரணம்,

| | | |
|---|---|---|
| மாங்கொட்டை | பலம் | க |
| வெந்தியம் | ,, | க |
| கருவேப்பிலை | ,, | க |
| மாதுளம்பழத்தோல் | ,, | க |
| சுண்டக்காய்வற்றல் | ,, | க |

இவையிடித்து சூரணித்துவைத்துக்கொண்டு யெருமைத்தயிரில் ௨-பலம் சூரணமிட்டுக்கலக்கி சாப்பிட சீதபேதி நீங்கும் இருவேளையும் ௨-௩-நாள் கொள்ளவும் காரமாகாது.

பித்தத்திற்குசூரணம்,

| | | |
|---|---|---|
| சீரகம் | கழஞ்சு | ௩ |
| அதிமதுரம் | ,, | ௩ |
| இஞ்சிஉலர்த்தியது | ,, | ௨ |
| திப்பிலி | ,, | ௨ |
| ஏலம் | ,, | ௧ |

இவைகளையிடித்து சூரணித்து வஸ்திரகாயம்செய்து சக்கரை ௬-கழஞ்சு கூட்டிக்கலந்து சீசாவிலவைத்துக்கொள்ளவும் திருகடிசூரணம் யெடுத்து தேனிற்குழப்பித் தின்னவும் பித்தம்நாற்பதும்பரநதோடிப்போம் இருவேளையுமாக ௰-௨௰-௩௰-௪௰-நாள் வீதம்கொள்ளவும் இச்சாபத்தியம்,

சூ ர ண வ கு ப் பு

முற்றிற்று,



உ

கடவுள் துணை.

பத்தாவது

# பலரோகவகுப்பு.

## விரைவாதவாய்வுக்கு.

| | | |
|---|---|---|
| ஆகண்டைவேர் | பிடி | ௧ |
| வெண்காரம் | ,, | ௧ |
| மிளகு | ,, | ௧ |
| நாயுருவிவிரை | ,, | ௧ |

இவையாவும் ஒன்றாயிட்டு அரைத்துபுன்னைக்காய்விதம் இருவேளையும் ௫-௭ நாள்கொள்ளவும் வாதத்தால் வீங்கியவிரைவீக்கம் சுவஸ்தமாகும் இச்சாபத்தியம்.

## அண்டவாய்வுக்கு,

கருஞ்சீரகம் பூண்டு தேன்விட்டரைத்து கழர்ச்சிக்காயளவு இருவேளையும் ௰-நாள்தின்னவும் அண்டவாய்வு தீரும்,

## வாதகுன்மத்திற்கு.

பாப்பாரமுள்ளி துஞ்சைநொச்சி திப்பிலி பூண்டு காயம்நல்லவெல்லம் ஓமம் பிசைவுடனே சமன்கொண்டு மிதிபாவல் சாறுவிட்டு அரைத்து கெச்சக்காய்விதம் இருவேளையும் ௫-௭ நாள் கொள்ளவேண்டியது.

## சீதசுரத்திற்கு.

மிளகு (உ) விராகனிடை பொடித்து தயிர்விட்டுபிசை ந்து பிரகுகொஞ்சம் நெய்விட்டு மத்தித்துமூன்றுவேளையாக பாகித்துத் தின்னவும் உடனே வென்னீர்சாப்பிடவும்.

---

## விரைவாதத்திற்கு குடிநீர்.

| | | |
|---|---|---|
| கடுக்காய் | பலம் - | க |
| கழற்சிப்பருப்பு | ,, | க |
| சுக்கு | ,, | க |
| முடக்கொத்தான் | ,, | க |

இவைநாலும் உரலிலிட்டு பஞ்சுபோல் இடித்து படி ஜெலம்வைத்து கால்படியாகயிறக்கி இருவேளைபாகித்து சா ப்பிடவும் இப்படி (ஙு) நாள் ஆறுவேளை கொள்ளவும்.

---

## சூசிகவாய்விற்கு.

| | | |
|---|---|---|
| பருத்திகொட்டை | பலம் - | அரை. |
| கையான்யிலை | ,, | அரை |
| ஏலம் | ,, | அரை |
| கெளதும்பை | ,, | அரை |
| சுக்கு | ,, | அரை |
| திப்பிலி | ,, | அரை |
| மிளகு | ,, | அரை |
| ஏவாச்சாரம் | ,, | அரை |

இவையாவும்யிடித்து வஸ்திரகாயம்செய்து இஞ்சி சூர ணத்தில் நாலுக்கொருபங்கு ஊமத்தவிதை சூரணம் கூட்டி கலந்துவைத்துக்கொண்டு பனைவெல்லத்தில் கழற்சிக்காயள வு சூரணத்தைபிசைந்து சாப்பிடவும் (ரு) நாள்கொள்ளவும் இச்சா பத்தியம்.

---

## தளிர்குளிருக்கு.

பசும்மோரில் ஊரினமிளகு அரைபலம் ஓயடுத்து துள ளசியிலை ஒருபிடி கற்பூரம்விராகன் (க) இதைவென்னீர் விட்

டரைத்து இருவேளையாக பாகித்து கொடுக்கவும் இப்படி (௨-௩) நாளகொடுக்கவும் இச்சாபத்தியம்.

## ரோகசுரத் திற்கு.

நிலக்குமிழ்வேர் சுக்கு பனைவெல்லம் இம்மூன்றும் சமன்போட்டு கியாழம்வைத்து, யெட்டொன்றாக்க இருவேளையும் (௪-௫) நாள்கொடுக்கவும்.

## இருமல் (சுர) க்கும்.

| | |
|---|---|
| கண்டங்கத்திரிவித்து | பலம் - அரை |
| தேத்தான்வித்து | ,, அரை |
| ஓம்ராஷ்டகம் | ,, அரை |
| திப்பிலி | ,, அரை |

இவைநான்கும் சூரணித்து (௨ற) பலம் தேன் அடுப்பேற்றி இச்சூரத்தைக் கொட்டிக்கிளரி யிரக்கவும்தேன்போதாவிட்டால் துளிதுளியாய்விட்டுக்கிளரவும் கொட்டைப்பாக்குவிதமாய் இருவேளையும் (௰) நாள்கொள்ளவும்.

## நேத்திரவாய்விற்கு.

வெள்ளுள்ளி வசம்பு குப்பைமேனியிலை இவைகளை ரவியிலிட்டு யிடித்து சாறுபிழிந்து உச்சியில் தேய்த்து சீய்க்காய் கொதிப்பித்தெடுத்து தலைக்குவார்க்கவும் இப்படி (௩) நாட்கொருதகுதி (௫-௬) விசைவார்க்கவும் உத்தமமாம்.

## கண்புகைச்சலுக்கு.

புளியாரையிலை வெங்காயம் சீரகம்இதையிடித்து சாறுபிழிந்து கண்ணிற் குத்திவரவும் தீரும்.

## நமைசொரிக்கு.

பூவரசம்பட்டை (க) பலம் யெடுத்து நெகிழ வரைத்து (ஐ) படி நீராகாரத்திற்கரைத்துக் கொடுக்கவும் இப்படி (ஙு) நாளீய சொரிநமை யிவைதீரும் ஆனல் (உ-ஙு) விசை பேதி யாகும்.

---

## பேய்ச்சொரிக்கு.

இந்துப்பு பொடித்து நெய்விட்டரைத்து தலைமுதல் பாதமட்டில் பூசிவைத்து மருநாள்காலை சீக்காய்கொதிப்பித்து அல்லது இலுப்பைப்கட்டி சுட்டரைத்து தலைமுழ்கச் செய்யவும் தீரும்.

---

## கால் வெடிப்புக்கு.

| | | |
|---|---|---|
| ஆலம்பால் | பலம் | வ |
| மெழுகு | ,, | வ |
| மஞ்சள் | ,, | வ |
| அரக்கு | ,, | வ |
| புராவெச்சம் | ,, | வ |
| கடல்நுரை | ,, | வ |

இவையாவும் காடிவிட்டரைத்து பீங்கான் கோப்பையில் வைத்துக்கொண்டு (ஐ) தினம் பூசிவர வெடிப்புமாறும்

---

## காலிற்புண்ணுக்கு.

| | | |
|---|---|---|
| வங்காளபச்சை | பணவிடை | உ |
| ஆவாரம்பட்டை | ,, | உ |
| பற்பாடகம் | ,, | உ |
| யிருள்ளி | ,, | உ |
| சூதம் | ,, | உ |

இவையாவும் கல்வத்திலிட்டு மைபோலரைத்து வெண்ணெயிற் குழப்பி சீலையில்தடவி காலிற் காணும்ரணங்களின் மேற்போட்டுவர ஆரிவிடும்.

---

## ஒட்டின்புண்ணுக்கு.

| | | |
|---|---|---|
| செங்கொட்டை | விராகனிடை | க |
| மயில்துத்தம் | ,, | க |
| வசம்பு | ,, | உ |

இவைகளையிடித்துப் பொடித்து நல்லெண்ணெயிற் குழப்பி புண்களின் மேற்றடவிவரத் தீரும்.

---

## வெள்ளைக்கொருக்கு அறையாப்புகட்டிக்கு.

சரக்கொன்றைபட்டை சீரகம் இரண்டும் சமன்கொண்டு அறைத்து புன்னைக்காய்விதம் தின்று ஆழாக்கு மோர்சாப்பிடவும் கடும்பத்தியம்.

---

## வெள்ளைக்கு.

மிளகும் வெள்ளருகும் சமன்கொண்டரைத்து புளியங்கொட்டை பிரமாணம் இருவேளையும் (ரு-ம்) நாள் தின்னவும் வருத்தஉப்பு சுட்டபுளிகூட்டவும்.

---

## மஞ்சள்வெள்ளைக்கு.

முத்தின பிரண்டையை யிடித்து சார் பிழிந்து அதற்குசமன் நல்லெண்ணெவிட்டு கலந்து (வீசம்படி) பிரமாணம் சாப்பிடவும் இப்படி மூன்றுநாள் கொள்ளவும் கடும்பத்தியம்

---

## காமாலைக்கு.

எருமைசாணியின்பால் எருமைத்தயிர் இரண்டுங்கலந்து சீரகம் வெங்காயம் சமன்சேர்த்து ஷை தயிராலரைத்து எருமைப்பாலில் கலக்கிசாப்பிடவும்.

---

## நரம்புசிலந்திக்கு.

எருக்கன்மொக்கு (கூம்) யெடுத்துவந்து பெருங்காயம் சமஎடைகூட்டி அறைத்து (ரு-எ) நாள் கொள்ள நரம்புசிலந்திமாறும்.

## காதுநோய்க்கு.

| | | |
|---|---|---|
| சுக்கு | உளுந்திடை | ௧ |
| திப்பிலி | ,, | ௧ |
| கோஷ்டம் | ,, | ௧ |
| சயிந்தலவணம் | ,, | ௧ |
| முத்தக்காசு | ,, | ௧ |
| வசம்பு | ,, | ௧ |
| உள்ளி | ,, | ௧ |
| கசூர்காய் | ,, | ௧ |
| (௯) யெருக்கிலைச்சார் | | |

நல்லெண்ணை ஒருபலம் யெடுத்து கூடி சார்விட்டு மற்ற மருந்துகள்யாவும் யிடித்து வஸ்திரகாயம் செய்துபோட்டு காச்சியிரக்கி காதில் (௨-௩) துளிவிட எவ்விதகாது நோயும் தீரும் (௨-௩) வேளைவிடவும்

---

## பெரும்பாட்டிற்கு

தென்னம்பாளையின் பூவெடுத்து அதில்பசும்பால்விட்டிடித்து பிழிந்து (ஞ) படியாக(௩) நாள்குடிக்கவும் பெரும்பாடுதீரும்.

---

## பழையபெரும்பாட்டுக்கு.

கௌதும்பையும் குருவரிசியும் சமஇடைகொண்டிடித்துமாவாக்கி பனைவெல்லம் போட்டு பிசைந்து புன்னைக்காய் வீதம் (௩) நாள் ஆறுவேளை இன்னவும் தீரும்.

---

## அதிசுவாசத்திற்கு.

நாரத்தம்பழ மேற்றோல்நீக்கி நடும்பழத்தின் சதையை யெடுத்துப்பிழிந்து அந்தசாற்றில் திப்பிலியைப் பொடித்துப் போட்டு மத்தித்து தின்னவும் (௫-௭-௰) நாள்தின்னசுவாசகாசயிருமல் சுவஸ்தமாம்

---

## கால்வெடிப்புக்கு.

சுண்ணாம்புகல் ஒருபடிகொண்டுவந்து பாண்டத்திலிட்டு பசும்பால் நல்லஜெலம் வகைக்கு அறைப்படிவார்த்து அடுப்பேற்றி கொதிக்கவைத்திரக்கி காலுக்கு வேதுபிடிக்கவும் இப்படி இருவேளையும் மூன்றுநாள் ஆறுவேளையாக வேதுபிடிக்கையில் கால்வெடிப்புமாறும்,

---

## இரைப்பிருமலுக்கு.

உயர்ந்த பிராந்தி ஒருபாயிண்டு கொண்டுவந்து வாய்சிறுசாயுள்ள புட்டியிலூத்தி நாட்டுவெண்காரம் இரண்டுபலம்பொடித்துப்போட்டு கஸ்தூரி அரைவிராகனிடை போட்டு குலிக்கிபிருவாய் கார்க்கடைத்து வைத்துக்கொண்டு மறுநாளுதையத்தில் தேக்கரண்டியளவு யெடுத்துசாப்பிடவும் இப்படி ஒருமண்டலங்கொள்ள இரைப்பிருமல் சுவாசம் காசம் இவைதீரும்இச்சாபத்தியம்.

---

## தீராப்பெரும்பாடுக்கு.

நாவல்மரத்தின்றோல் ஒதியன்மரத்தின்றோல் வகைக்குஒருபிடி கொண்டுவந்து பஞ்சுபோல்நருக்கி அறைப்படி ஜெலத்திலிட்டு (ஞ)படியாகக்காச்சி வடித்து சாப்பிடவும் இப்படி(௩) நாள் (௬) வேளைகொள்ளவும் சாந்தியாம்.

---

## பெறும்பாட்டுக்கு வேறு.

நாவல்பட்டை ஒருபிடி பெருமைமோரில்போட்டு யிடித்துபிழிந்தநீரில் அகில்பட்டைத்தூள் ஐந்துவராகனிடைகலந்து மூணுநாள் ஆறுவேளை சாப்பிடவும் தீரும்.

---

## தாதுபுஷ்டிக்கு.

| | | |
|---|---|---|
| பேரீச்சங்காய் | | ௪௰ |
| குங்கிலியம் | பலம் - | ௧ |
| கிராம்பு | ,, | ௧ |

ஜாதிக்காய் ,, க
ஜாபத்திரி ,, க

இவைகளையிடித்து தூளாக்கி வைத்துக்கொண்டு ஷ்டி பேரீச்சங்காயைகீறி விதையெடுத்துவிட்டு யிடித்துவைத் தி ந்தூளைவொவ்வொருகாயிலும் புகட்டி நூல்கட்டி பசும் நெய் அரைப்படி அடுப்பேற்றி ஷை காய்களைப்போட்டு வே கவைத்து யிரக்கும்போது தேன்கால்படி ஊற்றிக்குலுக்கி யிரக்கிவைத்துக்கொண்டு தினம் ஒருகாய்வீதம் (சய) நாள் தின்னவும்இந்த நாற்பதுநாளும் பெண்மயக்கம் கூடாது லா கிரியாகாது மீன்கருவாடு சேரப்படாது புகைசுருட்டு தொட ப்படாது.

---

## வீரியவிர்த்திக்கு.

| | | |
|---|---|---|
| முருங்கைப்பூ | விராகநிடை - | க |
| சாபத்திரி | ,, | க |
| காயம் | ,, | க |
| அபின் | ,, | க |
| சுத்தித்துபொரித்தவெண்காரம் | ,, | க |

இவைகளை கல்வித்திவிட்டு தேன் துளிதுளியாய் விட் டரைத்து (யச) உருண்டையாக செய்து தினம் இருவேளை யாக (எ) நாள் கொள்ளவும் இரவில் புளிப்பாகாது பால்விட் டு அன்னமருந்தவும் புகை புளி போகம் லாகிரி கவிச்சு இ துக ளாகாது தித்திப்புபண்டங்கள் யேராளமாய்த்தின்னவும் எட்டா வதுநாள் புணரவும்.

---

## புணர்ச்சியில் பிரியமில்லாதவர்க்கு

உடைக்காத பச்சைக்கடலையை நல்லெண்ணெயில் நன் றாய்வூரவைத்து ய-உய-கூய-கடலைவீதம் அந்திரோத்திற் தி ன்றுவரவும் இப்படி ய-உய-கூய-நாள்தின்னவும்.

—*—

## வேறுவகை.

சீரகமும் தேத்தான்கொட்டையும் சிறுகீரைவேரும் ச மநிடை கொண்டுவந்து இளநீரில் ஊறவைத்தரைத்து கெச்

சக்கரைவீதம்தின்னவும்இப்படி. ௰-உ௰-இருவேளையுங்கொள்ளவெள்ளை முதலானதும் நீங்கும் சூடு அகலும் புணர்ச்சிக்கு மகா ஆவல்கொடுக்கும்.

## வெள்ளைபிரமியத்திற்கு.

சங்குப்பியிலைரசம் அரையாழாக்கு அதில் பசுந்தயிரின் ஏடுபோட்டுப்பிசைந்து காலையில் மூன்றுநாள்தின்று கடும்பத்தியமிருக்கவும்.

## சீழ்பிரமியத்திற்கு.

அத்திப்பட்டை ஆவரம்பட்டை பூவரசம்பட்டை நாவல்பட்டை கொன்றைமரப்பட்டை இவை சமநிடைகொண்டு வந்திடித்து சூரணித்து தேனில்குழைத்துத் தின்னவும் இருவேளையும் (௫ ௰) நாள் கொள்ள தீரும்.

## சகலபிரமியத்திற்கும்

ஷை மருந்துகள் சூரணமாயாவது அல்லது சாறாகப்பிழிந்து சமயிடை விளக்கெண்ணெய்விட்டு பரங்கிச் செக்கைதூள் ஒருபலம்போட்டுக் கலந்து காய்ச்சிவடித்து (எ-கூ) நாள் வீதமாக சாப்பிடவும் இச்சாபத்தியம்.

## சிறுநீரில்ரத்தங்கண்டால்

நெருஞ்சிவிரை ஒருபிடியெடுத்து செவ்விளநீரிலூறி அரைத்து கரைத்துக்குடிக்கவும் இருவேளையும் (௫-௰) நாள்நாள் கொள்ளவும்.

## வெகுமூத்திரத்திற்கு.

வெள்ளாட்டிரச்சியைக் கொண்டுவந்து ஷை நோயாளியின்மூத்திரத்தில் ஒருஜாமம் ஊறவைத்து பின்பெடுத்து கழுகிகாரசாரமிட்டு கறிசமைத்துண்ணவும் இப்படி விடாமற்றினம் (௰-௫) நாள்தின்னவும்.

## நீரொழுக்கிற்கு

எள்ளுப்புண்ணாக்கு கோவையிலை சரியிடை கூட்டி அரைகாரமிட்டு புரட்டி மூணுநாள் கொடுக்கவும் சாந்தியாகும்.

---

## படுக்கையில் சிறுநீரிறங்கலுக்கு,

படுக்குமிடத்தில் அரிசிதெளித்து அதன்மேல் பாய்போட்டுபடுக்க சிறுநீர்விட்டால் அந்நீரிலூறிய அரிசியைகாலையிலெடுத்து அரைத்து அடைதட்டிச் கட்டுத்தரவும் இப்படி (௩-௫) நாள் கொடுக்கவும்.

## இரத்தமூலத்திற்கு.

| | | |
|---|---|---|
| பெருக்கன்கிழங்கு | பலம் - | ௧ |
| புழுங்கலரிசி | ,, | ௧ |
| உளுந்து | ,, | ௨ |

இம்மூன்றும் அரைத்துப் புளிக்கவைத்து தோசைசுட்டு இருவேளையும் கொடுக்கவும் (௩-௫) நாள் கொள்ளவும்.

## வெட்டைக்கு.

தேங்காயொன்று கொண்டுவந்து வோடைநீக்கி பூங்கம்வேர் ஒருபலம்போட்டு உரலிலிட்டுயிடித்து பால்பிழிந்து கால்அரையாழாக்குவீதம் (௩) நாள் கொடுக்கவும்.

---

## பக்கசூலைக்கு.

| | | |
|---|---|---|
| கள்ளிக்கொழுந்தின்சார் | வராகனிடை - | ௧ |
| பூண்டுதயிலம் | ,, | ௧ |
| காயம் | ,, | ௧ |

இம்மூன்றுங் குழைப்பிக்கொடுக்கவும் இப்படி (௩) நாள் கொடுக்கவும் இச்சாயத்தியம்.

## மேகசூலை.

| | | |
|---|---|---|
| பச்சைவெள்ளருகு | பலம் - | உ |
| பழம்புழுங்கலரிசி | ,, | க |

இவையிரண்டும்அரைத்து அடைசுட்டு வெந்நீர்விட்டுத்திக்கொண்டு ஒருஅடை தின்னவும் இதை இரட்டையாக யிருவேளையும் குளிக்கும்போதெல்லாம் தின்னவும் இப்படி (உ௰) (௩௰) நாள் தின்றுவரவும் தீரும்.

## இரத்தக்கழிச்சலுக்கு.

கலைமான்கொம்பை மெல்லியதூளாகசீவி (க) பணவிடையெடுத்து பசும்பால் ஆழாக்கில்போட்டு காச்சி எலுமிச்சம்பழம்ஒருபத்தைபிழிந்து சாப்பிடவும் இப்படி (ங) நாள் கொள்ளவும் இரத்தக்கழிச்சல் மாரும்.

## அஜீரணத்திற்கு.

| | | |
|---|---|---|
| முருங்கைப்பட்டை | பலம் - | ௧ |
| வெள்ளுள்ளி | ,, | ௧ |
| சுக்கு | ,, | ௧ |
| ஓமம் | ,, | ௧ |
| கற்றாழம்சோறு | ,, | ௧ |

ஒருபடிநீர் சட்டியிலூற்றி ஷெ மருந்துகளை யிடித்துப்போட்டு ஆழாக்கு அளவாக சுண்டக்காச்சி கடுகு உளுந்து வகைக்கு ஒருவிராகனிடை தூள்போட்டு கூழ்போல் கிளரிசாப்பிடவும் அஜீரணம் மலபந்தம் இவைதீரும்.

## இருவாய்கட்டுக்கு.

நாரஞ்சிப்பட்டையை யிடித்துக்காயவைத்து சூரணித்து வெந்நீரிற் பிசைந்து நாழிஜெலத்திற் கரைத்துக் காச்சிஆழாக்குயியாழமாகக் காச்சி யிருவேளையும் குடிக்கவும்.

## இரத்தசீதம்வீழ்தலுக்கு.

அழிஞ்சிவேர்பட்டையை காயவைத்திடித்து அதைவெந்நீரிலரைத்துக் குடிக்கசீதம் நீங்கும்.

## கெணக்கழிச்சலுக்கு.

மாதளம்பிஞ்சு தென்னம்பிஞ்சு மாயிலைக்கொழுந்து இம்மூன்றும் சமயிடைகொண்டு அரைத்து புன்னக்காய்வீதம்கொடுக்கவும் உடனே காரமில்லாத சாதம் ஊட்டவும் இப்படி இருவேளையும் செய்ய கணக்கழிச்சல் நீங்கும்.

## சீதபேதிக்கு.

கலியாண முருக்கன்பட்டையை அரைத்து கன்னிடையன் தயிரிற்குழப்பி மூன்றுவேளையும் தின்னவும் இப்படி (௩) நாள் ஒன்பதுவேளை கொள்ளவும்.

## தேகக்கழிச்சலுக்கு.

பேதாரு (கால்பலம்) கொண்டுவந்து ஜெலத்தில்போட்டு ஊறியபின் அதைசிலுப்பி நுரையேறியபின் தொட்டால் பிசினிபோலாகும் கற்கண்டுபொடி - ௨ - பலம் கூட்டி குச்சியினால் நன்றாய்கிளரி மெல்லியசல்லாவில் வடிக்கட்டிசாப்பிடவும் இப்படி ஒருமண்டலம் சாப்பிடவும்.

## வெள்ளோக்காளத்திற்கு

| | | |
|---|---|---|
| சக்கரை | களஞ்சி - | ௪ |
| ஏலம் | ,, | ௩ |
| மதுரம் | ,, | ௩ |
| திப்பிலி | ,, | ௨ |
| இஞ்சி | ,, | ௨ |

இவைபொடித்து ஆப்பாலில்கலந்து சாப்பிடவும் தலைச்சுற்று வெள்ளோக்காளம் மயக்கம் பித்தம் இவை தீரும்.

## அதிசாரத்திற்கு.

விளாம்பிசினியை பொடித்து வேண்டியமட்டில் யெடுத்து சரியிடை நெற்பொரி பொடித்துப்போட்டு தேனில் குழப்பித் தின்னவும் இருவேளையும் கொள்ளவும்.

## சைவர்வாதத்திற்கு.

பச்சைநுவரை சமூலம்கொண்டுவந்து யிடித்து சாரபிழிந்து ஒஷெ செடியின்வேர் ஒருபிடியெடுத்து சாறுலரைத்துகுடித்துவர ம்-நாளில் வாதம் தீரும் இச்சாபத்தியம்.

---

## விப்புருதிக்கு.

சித்தாமணக்குப்பருப்பு மஞ்சள் யீருள்ளி மூன்றும் சமனிடைகொண்டரைத்து எருக்கம்பாலில் குழைப்பித் திரட்டி உமிக்கும்பியில் புடைத்து வெந்தபிரகெடுத்து உண்ண விப்புரிதிபோம்.

---

## மேககற்பம்.

கற்றாழைமடல் சோற்றையெடுத்து நல்லஜெலத்தில் யேழுவிசைகழுவி புன்னைக்காயளவெடுத்து பள்ளங்கோலி பணவிடை கற்றூரம்பம் வைத்துக்கின்னவும் இப்படி ஏ-நாள் காலேயில் தின்னவும மேகச்சூடுதணியும.

---

## மேகரோகத்திற்கு

தேங்காய்ப்பாலில் சிறுகுறிஞ்சான் வேரையரைத்து புன்னைக்காய்விதம் ஏ-ம்-நாள்தின்னவும் மேகசாந்தியாம.

---

## கபரோகந்தீர.

விரைநீக்கிய கடுக்காய்ப் பொடிசெய்து வஸ்திரகாயமிட்டெடுத்து கையான்சாற்றில் மத்தித்து கால்பலம்விதமாய் நாற்பதுநாள் தின்னவும்.

## வயித்தியகைமுறைகள்

## முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# வயித்திய கைமுறையின்

## விஷய அட்டவணை.

விஷய அட்டவணை

முற்றிற்று.

